Registered No. M. 1500.

NAVASAKTI

# நவசக்தி

| சந்தா விவரம் | | ரூ. அ. |
|---|---|---|
| வருட சந்தா | ... ... | 5 0 |
| ஆறுமாத சந்தா | ... ... | 3 0 |
| வெளிநாடு-வருட சந்தா | ... | 6 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

**விளம்பர விகிதம்**

| | | |
|---|---|---|
| பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | 0 | 8 |

முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு எ — பிரபவஹூ புரட்டாசிமீ ருஉ (21—9—27) புதன்கிழமை — பரல் சஅ

## "சாக்கடைப் பரிசோதகரின் அறிக்கை"

### மிஸ் மேயோவின் புத்தகத்தைப்பற்றி மகாத்மா காந்தியின் அபிப்பிராயம்

சென்றவாரத்து "எங் இந்தியா" வில் மகாத்மா காந்தி எழுதியுள்ள கட்டுரையின் சாராம்சம் வருமாறு:—

"நல்லோர்களின் நாவில் பாவமும் புண்ணியமாகின்றது; தீயோர்களின் நாவில் புண்ணியமும் பாவமாகத் தோற்றுகிறது; இவைகுறித்து நாம் வியப்புற வேண்டுவதில்லை.

முகிற்குழாங்கள் கடலிலிருந்து உப்பு நீரை அருந்தி, அதைத்திரும்ப இன்ப மழையாய், தூய நீராய்ப் பொழிதலையும், பாம்பு தூயபாலை அருந்திஅதைத்திரும்பக் கொடிய நஞ்சாகக் கக்குவதையும் காண்கிறோமன்றோ?

நதிகள் தங்கள் நீரைத் தாங்களே பருகுவதில்லை; மரங்கள் தங்கள் பழங்களைத் தாங்களே அருந்துவதில்லை.

மேகங்கள் தாங்கள் பொழியும் மழையினால் விளையும் தானியத்தைத்தின்பதில்லை; அவ்வாறே நல்லோர் மற்றவர்களுடைய நலத்துக்காக உழைக்கின்றனர்."

* * *

மிஸ் மேயோ எழுதிய "பாரதத் தாய்" என்னும் புத்தகத்தைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தை வெளியிடுமாறு பல நிருபர்கள் எழுதியிருக்கிறார்கள். மிஸ் மேயோவும் தமது புத்தகத்தின் பிரதியொன்றை எனக்கு அனுப்பி வைத்திருக்கிறார். எனது தற்போதைய உடல் நிலையில், இச்சுற்றுப் பிரயாணத்தின்போது அதைப் படித்திருக்கவே மாட்டேன். ஆனால் மேற்சொன்ன கடிதங்களினால் அதை உடனே படித்தல் கட்டாயமாயிற்று. புத்தகம் மிகச் சாமர்த்தியமாக எழுதப்பட்டிருக்கிறதென்பதில் ஐயமில்லை. அதில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கும் மேற்கோள்கள், அப்புத்தகத்தை உண்மை யுள்ளதுபோல் தோன்றச் செய்கின்றன. ஆனால், அப்புத்தகத்தைப் படித்ததும் எனக்கேற்பட்ட போதவான அபிப்பிராயம் என்னவென்றால், அது சாக்கடைப் பரிசோதகர் ஒருவரின் அறிக்கை என்பதேயாகும். இங்நாட்டிலுள்ள சாக்கடைகளை யெல்லாம் திறந்து பரிசோதித்து, அவற்றினின்று வெளியாகும் நாற்றத்தை வர்ணிப்பதற்கென்று அனுப்பப்பட்ட ஒருவரால் எழுதப்பட்ட நூலாகக் காணப்படுகிறது. சாக்கடைப் பரிசோதனைக்காகவே இந்தியா சென்றதாக மிஸ் மேயோ ஒப்புக்கொண்டிருப்பின் அவருடைய புத்தகத்தைக் குறை கூறுதற்கு அதிக இடமிராது. ஆனால் "இந்தச் சாக்கடைகளே இந்தியா" என்று ஓரளவு இறுமாப்புடன் அவர்முடிவு கட்டியிருக்கிறார். இந்தியாவைப் பற்றிச் சிறிதேனும் தெரிந்தவர்கள், இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த நாட்டு மக்களின்மீது அவர் சாட்டும் பயங்கரமான குற்றங்களை ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

* * *

புத்தகத்தில் கூறப்பட்டுள்ள விவரங்கள் எவ்வளவுதான் உண்மையானவையா யிருப்பினும், புத்தகம் மொத்தத்தில் பொய்ம்மையானது என்பதில் சந்தேகமே யில்லை. லண்டன் சாக்கடைகளையெல்லாம் திறந்துவிட்டு அவற்றினின்று வெளியாகும் நாற்றத்தை உண்மையுடன் வருணித்து, "இதுதான் லண்டன்" என்று கூறினேனாயின், என்னுடைய வருணனையை யாரும் மறுப்பதற்கு முடியாது; ஆனால் என்னுடைய முடிவைப் பெரும் பொய் என்று எவரும் கண்டிப்பர்; அது நியாயமுமாகும். மிஸ் மேயோவின் புத்தகம் இத்தகையதேயன்றி வேறில்லை.

* * *

இந்தியாவைப்பற்றித் தாம் படித்த நூல்கள் தமக்குத் திருப்தி தரவில்லையாதலால், "பணத்துக்கு வேலை செய்யாதவரும், விருப்பு வெறுப்பு அற்றவரும், நடு நிலையுள்ளவருமான ஒருவர் இந்திய மக்களின் சாதாரண தினசரி வாழ்க்கையில் என்ன காணலாமென்று பார்க்கும் பொருட்டு" தாமே இந்தியாவுக்கு நேரில் சென்றதாக மிஸ் மேயோ கூறியிருக்கிறார்.

* * *

மிகவும் சவனத்துடன் அந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்தபிறகு, மிஸ் மேயோ பாராட்டும் உரிமையை நான் ஒப்புக்கொள்வதற்கில்லையென வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். அவர் பணம் வாங்கியவரா யில்லாமலிருக்கலாம். ஆனால் புத்தகத்தில் ஒரு பக்கத்திலேனும், விருப்புவெறுப் பற்றவராயும், நடுநிலையுள்ளவராயும் அவர் காட்டிக்கொள்ளவில்லை. இந்தியாவில் அரசாங்க ஆதரவு பெற்ற பிரசுரங்கள் எவ்வளவோ நாம் பார்த்திருக்கிறோம். "பணம் பெற்ற" என்பதற்குப் பதிலாக "ஆதரவு பெற்ற" என்று கூறுவது நாகரிகம் என்று கருதப்படுகிறது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பிருந்தே, நாம் இராஜரீக வித்தையைக் குறித்து அறிவோம். கண்யமுள்ளவர்களென்றும் கல்விமான்களென்றும் பெயர் பெற்றவர்களைக் கொண்டு சந்தேகப்பட்ட பெயர்வழிகளைத் தொடரச் செய்வதும், அரசாங்கத்தின் புகழ்ச்சியைப் பாடச்செய்து அங்நற்சாட்சிப் பத்திரம் நடுநிலைமையி லுள்ளவர்களிடமிருந்து வந்தது போல் தோன்றச் செய்வதும் இராஜரீக வித்தையில் அடங்கியவையென நமக்குத்தெரியும். இவ்வித்தை பிரிட்டிஷாரால் பரிபூரணமாக்கப்பட்டிருக்கிறது. எனவே, மிஸ்மேயோ இத்தகைய பெயர் வழிகளில் ஒருவர் என்னும் சந்தேகத்துக்காளானால் அதற்காக அவர் கோபங் கொள்ள மாட்டாரென நம்புகிறேன்.

* * *

இச்சந்தேகத்தை விட்டு விட்டுப் பார்த்தோமாயின், இந்தப் பொய்ம்மைப் புத்தகத்தை அவர் ஏன் எழுதினார் என்ற கேள்வி எழுகிறது. அஃது இருவகையில் பொய்ம்மையானதாகும். முதலாவதாக, இந்தியமக்கள் அனைவரையும், விலக்கென்பதின்றி, அவர்களுடைய சமயக் கொள்கை, ஒழுக்க நெறி, சுகாதாரம் முதலியவற்றின்பொருட்டு அவர் தூற்றியிருக்கிறார். இரண்டாவதாக பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு உரியனவல்லாத பல குணாதிசயங்களை அவர் கற்பித்திருக்கிறார். இவ்விருவகையில் அவருடைய நூல் பொய்ம்மை நூலாகும்.

* * *

மிஸ் மேயோ பணம் பெற்றவரல்லரெனின், அவர் இந்தியரிடம் மிகக் கொடும்பகைமையும், ஆங்கிலேயரிடம் அதி தீவிர பிரேமையும் உள்ளவராயிருக்கவேண்டும். இந்தியரிடம் எவ்வித குணத்தையும் அவர் காண மறுக்கிறார். பிரிட்டிஷாரிடத்தும் அவர்கள் ஆட்சியினிடத்தும் எவ்விதக்குறையும் அவர்கண்ணுக்குப் புலனாவதில்லை.

* * *

மேற்கோள்கள், விவரங்கள் எல்லாமும் உண்மையுடன் சொல்லப்படவில்லை. எனக்கு நேரில் தெரிந்த சில விவரங்களின் பொய்ம்மையை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

* * *

கவி ரவீந்திரர் குழந்தை மணத்தை ஆதரிப்பதாக அவர் கூறியிருப்பது சிறிதும் தகுதியற்றதொன்றாகும். இளமை மணத்தில் சில நலங்கள் உண்டு என்று கவி கூறியிருப்பது உண்மையே. ஆனால் குழந்தை மணத்துக்கும், இளமை மணத்துக்கும் எவ்வளவோ வேற்றுமையுண்டு. சாந்திநிகேதனத்தில் வசிக்கும் சுதந்திரப் பற்றுள்ள மாதர்களையும் இளம் பெண்களையும் மிஸ் மேயோ பார்த்திருந்தாரானால், கவியின் கருத்தென்னவென்பது அவருக்குத் தெளிவாகியிருக்கும்.

* * *

தம்முடைய வாதங்களுக்கு ஆதரவாக என்னுடைய கூற்றுக்களை மிஸ் மேயோ அடிக்கடி எடுத்தாண்டு என்னைக் கௌரவித்திருக்கிறார். சீர்திருத்த முயற்சியில் ஈடுபட்ட ஒருவனின் தினசரியிலிருந்து சில குறிப்புகளை அவற்றின் சந்தர்ப்பத்தினின்று வேறுபடுத்திக் காட்டி, அவற்றைக் கொண்டே அம்மக்களனைவரையும் ஒருவன் தூற்றத் தொடங்குவானாயின், அறிவுடையோர் அவனுக்குச் செவி கொடுக்க மாட்டார். ஆனால் மிஸ் மேயோவோ, இவ்வாறு செய்திருப்பதோடன்றி, என்னைப்பற்றி அவர் குறிப்பிட்டிருக்கும் விவரங்கள் உண்மையானவைதானா என்று பரிசீலனை செய்யவுமில்லை. அவரே நிர்வாக அதிகாரியாகவும், நீதிபதியாகவும் இருக்கிறார். அவரே குற்றம் சாட்டிவிட்டு அவரே தீர்ப்பும் கூறிவிடுகிறார். என்னை வந்து அவர் பார்த்ததைப் பற்றிச் சொல்லும்போது, என்னுடன் எப்போதும் இரண்டு "காரியதரிசி"கள் இருப்பதாகவும், என் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையையும் அவர்கள் எழுதிக்கொள்வதாகவும் சொல்கிறார். இஃது உண்மையன்று. அப்படிப்பட்டவர்கள் யாரும் என்னிடம் வேலையில் அமர்ந்திருக்கவில்லை. எனது சகாக்களில் ஒருவரான ஸ்ரீ மகாதேவ தேசாய், என் அருகிலிருக்கும்போதெல்லாம், நான் கூறுவனவற்றில் எழுதத் தகுந்தவை என்று தாம் கருதுவனவற்றை எழுதிக்கொள்கிறார். அவரை இப்படிச் செய்ய வேண்டாமென்று நான் தடுக்க முடியாது. ஏனெனில், எங்களுடைய உறவு, ஹிந்துக்களின் கலியாணத்தைப்போல், ரத்து செய்ய இயலாததாகும்.

* * *

இஃது அவ்வளவு பிரமாதமன்று. எனக்கு அவர் செய்திருக்கும் பெருங் குற்றம் 387, 388ம் பக்கங்களில் வருகிறது. "ஆயுர்வேத சாஸ்திர மானது மேனாடு தரக்கூடிய எதையும்விட மேன்மையானது" என்று கவிரவீந்திரர் கூறியதாக அவர் குறிப்பிடுகிறார். (இம்முறை அவர் ஆதாரம் காட்டத்தவறி விடுகிறார்.) (பின்னர், வைத்திய சாலைகள் பாவ வளர்ச்சிக்குரிய ஸ்தாபனங்கள் என்னும் என் அபிப்பிராயத்தைக் குறிப்பிட்டு விட்டு என் வாழ்க்கையின் தூய சம்பவமொன்றை உருத்தெரியாமல் திரித்துக் கூறியிருக்கிறார். புத்தகத்திலிருந்து அப்பகுதியை அப்படியே எடுத்துக் காட்டுவதின் பொருட்டு வாசகர்கள் மன்னிக்க வேண்டுகிறேன்:—

* * *

"அப்போது அவர் (காந்தி) சிறைச்சாலையிலிருந்த படியால் ஐ. எம். எஸ் வர்க்கத்தைச் சேர்ந்த பிரிட்டிஷ் ஸர்ஜன் ஒருவர் நேரே அவரைப் பார்க்க வந்தார். அவர் சொன்னதாவது:— 'மிஸ்டர் காந்தி, உங்களுக்குக் குடல் அநுபந்த நோய் இருக்கிறதென்று வருத்தத்துடன் தெரிவிக்கவேண்டியவனா யிருக்கிறேன். நான் உங்களுடைய வைத்தியனாயிருந்தால் உடனே இரணசிகிச்சை செய்வேன். நீங்கள் ஒருவேளை உங்கள் ஆயுர்வேத வைத்தியரை அழைக்க விரும்புவீர்கள்?'

ஆனால் மிஸ்டர் காந்திக்கு அத்தகைய எண்ணம் எதுவும் இல்லையென்று தெரிய வந்தது.

ஸர்ஜன் மேலும் சொன்னதாவது:— 'நான் சத்திரம் வைக்க விரும்பவில்லை. ஏனெனில், அதன் முடிவு வேறுவிதமானால் உங்களுடைய நண்பர்கள் எல்லாரும் நாங்கள் தீயநோக்கத்துடன் ஏதோ செய்துவிட்டதாகக் குற்றம் சாட்டுவார்கள்.'

'நீங்கள் சத்திரம் வைக்கச் சம்மதித்தால் என்னுடைய நண்பர்களை இப்போதே அழைத்து என் வேண்டுகோளின் மீதே நீங்கள் சத்திரம் செய்வதாக [illegible] விடுகிறேன்' என்று மிஸ்டர் காந்தி [illegible]னார்.

இவ்வாறு, மிஸ்டர் காந்தி 'பாவத்தை வளர்க்கும் ஸ்தாபன' மொன்றுக்குத் தமது முழுமனதுடன் சென்று, அங்கே அந்த 'மகா கொடிய' ஐ. எம். எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர் ஒருவரால் இரணசிகிச்சை செய்யப்பட்டார். அத்துடன் அவர் குணமடையும் வரையில் ஆங்கிலச் சகோதரி ஒருவர்தான் அவருக்குப் பணிவிடையும் செய்துவந்தார். இதன் பயனாக அச்சகோதரி உபயோகமுள்ள பெயர் வழிதான் என்று மிஸ்டர் காந்தி கருதத் தொடங்கியதாகத் தெரிகிறது."

* * *

மேலே கண்ட விவரம் உண்மைக்கு முற்றும் மாறுபாடானதாகும். அதில் [illegible] செய்வதாயுள்ளவற்றை மட்டும் இங்கே [illegible] மற்றத்தவறுகளை விட்டு விடுகிறேன். ஆயுர்வேதவைத்தியரை அழைப்பது பற்றிய பேச்சே எழுந்திருக்க இடமில்லை. என்னைக்கேளாமலும், என் விருப்பத்துக்கு மாறாகவும் கூடச் சத்திரம் வைக்கக் கர்னல் மாடாக்குக்கு உரிமை இருந்தது. ஆனால் அவரும், ஸர்ஜன்-ஜெனரல் ஹூட்டனும் அப்படிச் செய்யாமல், என்னுடைய சொந்த டாக்டர்கள் வரும்வரை காத்திருக்கலாமாவென்று கேட்டார்கள். என்னுடைய டாக்டர்களை அவர்கள் அறிவார்கள். அவர்களும் மேனாட்டு வைத்திய முறையிலும்,

இரண சிகிச்சையிலும் பயிற்சி பெற்றவர்கள் தான். அவர்களுக்குத் தந்தியும் அடித்திருந்தார்கள். என்னிடம் இவ்வளவு மரியாதையாய் நடந்த மேற்சொன்ன ஐரோப்பிய டாக்டர்களிடம் நானும் மரியாதையாய் நடந்துகொள்ள வேண்டாமா? என்னுடைய டாக்டர்களுக்காகக் காத்திருக்க வேண்டுவதில்லையென்றும், ஒரு வேளை சத்திர சிகிச்சையில் தவறு நேர்ந்துவிட்டால் அவர்களைப் பாதுகாப்பதற்காக ஒரு கடிதம் தருவதாகவும் சொன்னேன். அவர்களுடைய திறமையிலேனும், நல்லெண்ணத்திலேனும் எனக்கு அவநம்பிக்கையில்லை யென்பதைக் காட்டவிரும்பினேன். அவர்களிடம் எனது நல்லெண்ணத்தை நிரூபிப்பதற்கு அஃது ஒரு நல்ல சந்தர்ப்பமா யிருந்தது.

* * *

ஆனால் வைத்தியசாலைகளைப் பற்றிய என் அபிப்பிராயம் முன்போலவேதான் இருந்து வருகிறது. நானும், என் பாதுகாப்பிலுள்ளவர்களும் மேனாட்டுவைத்திய முறையில் தேர்ந்தவர்களால் சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறோமென்பது உண்மையே. இவ்வாறே தான், மோட்டார்களையும், ரயில்களையும் நான் பலமாகத் தாக்கிவருகிறேனுயினும், அவற்றை உபயோகப்படுத்திக் கொண்டு வருகிறேன். நான் இந்த தேகத்தையே ஒரு தீமை யென்றும், என் அபிவிருத்திக்குத் தடையானதென்றும் கருதுகிறவன். ஆனால் அஃது இருக்கும் வரை அதைக் கூடியவரை நல்ல முறையில் உபயோகப் படுத்துவது என் கொள்கைக்கு முரண்பட்டதாக நான் நினைக்கவில்லை.

* * *

மிஸ் மேயோ உண்மையைத்திரித்துக் கூறியிருப்பதற்கு மேற் காட்டிய உதாரணம் எனக்கு நேரில் தெரிந்த விஷயமாகும். ஆனால் சாதாரணமாய் இந்தியர்களுக்குத் தெரியவே தெரியாத பல நிகழ்ச்சிகளின் வருணனைகள் இப்புத்தகத்தில்நிறைந்திருக்கின்றன. வேல்ஸ் இளவரசரின் விஜயத்தின்போது நடந்த ஒருநிகழ்ச்சியை அவர் வருணித்திருக்கிறார். அதைப்பற்றி இந்தியர்கள் ஒன்றுமே அறியார்கள், உண்மையில் அது நிகழ்ந்திருந்தால் இந்தியர்கள் அதைப்பற்றிக் கேள்விப்படாதிருக்க முடியாது. பம்பாயில் எங்கேயோ ஓரிடத்தில்ஜனக் கூட்டம் ஒன்று இளவரசரின் மோட்டாரை அணுக முயன்றதாம், போலீஸார் மோட்டாரைச் சூழ்ந்து பாதுகாக்க முயன்றார்களாம், திரள்திரளாகச் சூழ்ந்திருந்த ஜனக் கூட்டத்தினிடையே மோட்டார் நகர்ந்துசென்று கடைசியாக ரயில்வே ஸ்டேஷனை அடைந்ததாம். ரயில் புறப்பட மூன்று நிமிஷமிருந்தபோது இளவரசர் தடைகளை நீக்கிக் கூட்டத்தை உள்ளே விடும்படி சொன்னாராம். அப்போது "பிரவாக காலத்தில் நதியின் வெள்ளப் பெருக்கேபோல் கணக்கில்லாத மக்கள் திரள்திரளாக வந்தார்கள். அவர்கள் கோஷம் செய்தார்கள்; சிரித்தார்கள்; ஆனந்தக் கண்ணீர் பெருக்கி அழுதார்கள்; வண்டி புறப்பட பின்னரும் வண்டியுடன் கூட நெடுந்தூரம் ஓடி ஓட முடியாமற் போன பின்னரே நின்றார்கள்!" என்று மிஸ் மேயோ வருணித்துக்கொண்டு போகிறார். இவ்வளவும் 1921-ம்௵ நவம்பர்மீ 22௳ மாலை, கலவரங்கள் இன்னும் முற்றும் ஓயாதிருந்தபோது நடந்ததாம்! இம்மாதிரி சரக்குகள் "இதோ ஒளி பாருங்கள்" என்னும் அத்தியாயத்தில் நிரம்ப இருக்கின்றன.

* * *

19-ம் அத்தியாயத்தில், பிரிட்டிஷ் ஆட்சியினால் ஏற்பட்ட நலங்களைப்பற்றிப் பலருடைய அபிப்பிராயங்களைத் தொகுத்தளித்திருக்கிறார். ஆனால் இவற்றில் அநேகமாக ஒவ்வொன்றும் மாசற்ற கண்யமுள்ள ஆங்கிலேயர்களாலும், இந்தியர்களாலும் மறுக்கப்பட்டவையாகும். 17-ம் அத்தியாயம் இந்தியா உலகத்துக்கே ஓர் அபாயம் என்று நிரூபிப்பதற்காக எழுதப்பட்டது.

* * *

மிஸ் மேயோவின் முயற்சியின் பயனாக சர்வதேச சங்கத்தார் இந்தியாவை ஒதுக்கப்பட்ட தேசமென்றும், பொருள்பறிப்பதற்குத் தகுதியற்றதென்றும், அதனுடன் பிறதேசங்கள் தொடர்பு கொள்ளக் கூடாதென்றும் கட்டளை பிறப்பித்து விடுவார்களானால், மேனாடு கீழ்நாடு இரண்டும் லாபமடையும் என்பதில் சந்தேகமில்லை. அப்போது இங்கு உள்நாட்டு யுத்தங்கள் நடைபெறலாம். அல்லது மிஸ் மேயோ பயமுறுத்துவதுபோல், வடமேற்கு எல்லைப்புறத்தினின்றும் மத்திய ஆசியாவிலிருந்தும் திரள்திரளாகக் காட்மிராண்டிகள் வந்து ஹிந்துக்களை விழுங்கியே விடலாம். ஆனால் நாளுக்குநாள் மெலிந்து சாவதைவிட அப்படி ஒரே யடியாக விழுங்கப்பட்டு விடுதல் சிறந்ததென்று கூறுவேன். உயிருடன் தீயில் போட்டு வதைத்துக்கொல்வதைவிட, மின்சார இயந்திரத்தில் ஒரு நொடியில் கொன்றுவிடுதல் ஜீவகாருண்ய முறை யாகுமன்றோ? எனவே, மிஸ் மேயோ வர்ணிக்கும் வண்ணம், எதிர்க்கும் சக்தியற்றவர்களும், சுகாதார முறை யறியாதவர்களும், குருட்டு நம்பிக்கையுள்ளவர்களும், காமாதுரர்களுமான ஹிந்துக்களை மத்திய ஆசியாவிலிருந்து வரும் படைத்திரள்கள் ஒரே யடியாய்ச் சம்ஹாரம் செய்துவிடுவதே புண்ணியமா யிருக்கும்.

* * *

ஆனால் துரதிர்ஷ்ட வசமாக மிஸ் மேயோவின் இலட்சியம் அதுவன்று. இந்தியா தன்னை ஆளத்தகுதியற்றது என்னும் காரணத்தின்மீது இந்தியாவில் வெள்ளைக்கார ஆதிக்கத்தை நிலைநாட்டுவதே அந்த அம்மையின் நோக்கமா யிருக்கிறது.

* * *

இப்புத்தகத்தில் பற்பல மனிதர்கள் கூறியனவென்று மிஸ் மேயோ எடுத்துக்காட்டியிருக்கும் மொழிகள் கட்டுக்கதையில் வரும் விஷயங்களாகவே காணப்படுகின்றன. அவற்றில் பல நம்புவதற்குச் சிறிதும் தகுதியற்றவை. சுதேச மன்னர் ஒருவர் பின்வருமாறு கூறியதாக அவர் சொல்கிறார்:— "நாங்கள் இங்கிலாந்து அரசருடனேயே உடன்படிக்கை செய்துகொண்டிருக்கிறோம். வங்காளி பாபுக்களை உடைய அரசாங்கத்துடன் அன்று. இந்தப் புதிய அற்பர்களுடன் நாங்கள் சம்பந்தம் வைத்துக்கொள்ளோம். பிரிட்டன் இருக்கும்வரை, அரசரின் சார்பாக ஆங்கிலேய கனவான்களை அனுப்பட்டும். ஒரு தொல்லையும் நேரிடாது. பிரிட்டன் போய்விட்டால் மன்னர்களாகிய எங்களுக்கு என்ன செய்வதென்று தெரியும்."

* * *

இந்தியமன்னர்கள் எவ்வளவுதான் கீழ்நிலையடைந்திருந்தாலும் இவ்வளவு கேவலமாகப் பேசியிருக்கக் கூடிய ஒரு மன்னராவது இருக்க முடியுமென்று நான் நம்புவதற்கில்லை. மற்றொரு சமஸ்தானத்தின் திவான் பின்வருமாறு சொன்னாராம்:— "பிரிட்டன் இந்தியாவை விட்டுப் போய்விடுமென்று எங்கள் மன்னர் நம்பவில்லை. ஆயினும் இங்கிலாந்தில் புதிதாக அதிகாரத்துக்கு வந்திருப்பவர்கள் அவ்வளவு புத்திகெட்டுப் போகலாம். ஆதலின் எங்கள் மன்னர் துருப்புகளும், தளவாடங்களும் தயார் செய்து வருகிறார். பிரிட்டிஷார் போய்விட்டால் மூன்று மாதத்திற்குப் பிறகு வங்காளத்தில் ஒரு ரூபாவாவது, ஒரு கன்னிகையாவது பாக்கி விடப்பட மாட்டார்கள்."

* * *

இப்படிப்பட்ட மன்னரும், திவானும் யார் என்று மட்டும் மிஸ் மேயோ சொல்லவில்லை. இன்னும் அந்த அம்மை, தாம் சந்தித்த ஆங்கிலேயரும், ஆங்கில ஸ்திரீகளும் சொன்னதாகக் கூறும் மொழிகள் எல்லாம் உண்மையானால் அவர்கள் தங்களிடம் வைக்கப்பட்டுள்ளசம்பிக்கைக்குமுற்றும் அபாத்திரர்களாகநடந்துகொண்டிருக்கிறார்கள் என்றே சொல்ல வேண்டும். இப்படி இந்திய நண்பர்களிடம் ஒருவிதமாயும், மேனாட்டிலிருந்து வருவோரிடம் வேறுவிதமாகவும் பேசக்கூடிய ஆங்கிலேய ஸ்திரீபுருஷர்கள் இவ்வளவு பேர் இருப்பதுஉண்மையானால் நான் பெரிதும் துக்கமடைவேன். இந்தியாவை இழிவுபடுத்த விரும்பிய மிஸ் மேயோ உண்மையில் தாம் குறிப்பிடும் மனிதர்களையே இழிவுபடுத்தியிருக்கிறார். இதுவரை எழுதியவற்றால், மிஸ் மேயோ கூறியுள்ள விவரங்களைத் தனித்தனியாக எடுத்துக் கொண்டு பார்த்தாலே அவற்றில் பல ஆதாரமற்றவை என்று காட்டிவிட்டதாக நம்புகிறேன். மொத்தமாகச் சேர்த்துப் பார்த்தால் அப்புத்தகம் அளிக்கும் காட்சி முற்றும் பொய்யானதேயாகும்.

* * *

ஆனால் இந்தக் கட்டுரையை நான் எழுதுவதேன்? இந்திய வாசகர்களை உத்தேசித்தன்று. "எங் இந்தியா"வை வாரந்தோறும் அநுதாபத்துடன்படிக்கும் பல அமெரிக்க, ஆங்கில நேயர்களுக்காகவே இதைஎழுதினேன். மேற்படிபுத்தகத்தை நம்ப வேண்டாமென்று அவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். மிஸ் மேயோவின் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டா மென்றும் கேட்டுக்கொள்கிறேன். அந்த அம்மை நடுநிலைமையில் நின்று ஆராய்ந்ததாகக் கூறுகிறாராயினும் உண்மை அவ்வாறில்லை. அவருடைய புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் அவருடைய சொந்த விருப்பு வெறுப்புகளை புகுத்தியிருக்கிறார். அவர் கூறியுள்ள விவரங்களில் நான்கில் மூன்று பங்கு அமெரிக்காவிலிருந்த படியே அவர் சேகரித்திருக்கக் கூடும். இதைப் போன்ற ஒரு புத்தகத்தைவாங்குவோர் மேனாட்டில் ஏராளமாக இருக்கின்றனர் என்பது, மேனாட்டு இலக்கியமும், நாகரிகமும் இரங்கத்தக்க நிலையில் இருக்கின்றனவென்றே காட்டுகிறது. பண்டைத் தேசமொன்றின் மக்களுக்கு மிஸ் மேயோ செய்திருக்கும் இப்பயங்கரமான அநீதி அவர் தம்மையறியாமல் செய்ததாயிருக்க வேண்டுமேயென நான் நம்புகிறேன். அப்படியானால், அவர் அந்த அநீதியின் பொருட்டுக் கழிவிரக்கங் கொள்ளமாட்டாரா என்னும் சிறுநம்பிக்கை காரணமாகவும் இதை எழுதுகிறேன். இந்தியாவிஷயத்தில் அமெரிக்கர்களின் மனதைக் கெடுப்பதற்கு அவர் தமது திறமையைப் பயன்படுத்திருப்பதால் அமெரிக்கர்களுக்கும் அவர் பெரிய அநீதிசெய்திருக்கிறார்.

* * *

இப்புத்தகத்தை "இந்திய மக்களுக்கு" அவர் சமர்ப்பணம் செய்திருப்பதுதான் எல்லாவற்றிலும் பெரிய அநீதியாகும். சீர்திருத்த நோக்கத்துடன் அன்பினால் தூண்டப்பட்டு அவர் இப்புத்தகத்தை எழுதவில்லை யென்பது நிச்சயம். நான் கூறுவது தவறுனால் அவர் இந்தியாவுக்குத் திரும்பிவந்து குறுக்கு விசாரணைக்கு உட்படட்டும். குறுக்கு விசாரணையில் அவருடைய கூற்றுக்கள் அடிபட்டுப் போகாவிட்டால் அவர் நம்மிடையே வசித்து நம்மைச் சீர்திருத்தட்டும்! நிற்க.

* * *

இனி, விஷயத்தின் மற்றோர் அம்சத்துக்குச் செல்கிறேன். அமெரிக்கர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கும் இந்நூல் எவ்வித நன்மையும் செய்யாதாதலின் அவர்கள் படிப்பதற்சேற்றதன்று என்று கருதுகிறேனுயினும், இந்தியர் ஒவ்வொருவரும் இதைப்படித்துப் பயன் பெறலாமென்று கருதுகிறேன். அவர் நம்மீது சுமத்தியிருக்கும் குற்றங்களில் பலவற்றில் உண்மையில்லாமற் போகவில்லை. மற்றவர்கள் நம்மைப்பற்றி என்ன எண்ணுகிறார்களென அறிந்துகொள்ளுதல் நலமே செய்யும். அவர் கூறியுள்ள விவரங்களில் சிலவற்றைப்பற்றி ஆராய்ச்சி செய்யவும் வேண்டியிருக்கிறது. வைஷ்ணவர்களின் நாமத்துக்கு ஆபாசமான பொருள் ஒன்று உண்டென்று அவர் சொல்கிறார். நான் வைஷ்ணவ குடும்பத்தில் பிறந்தவனுயினும், இளமையில் நாமந் தரித்திருக்கிறேனுயினும், எனக்காவது என் குடும்பத்தார்க்காவது அதற்கு ஆபாசப் பொருள் உண்டென்று தெரியாது. இக்கட்டுரையைச் சென்னையில் எழுதுகிறேன். இங்கு சில வைஷ்ணவர்களைக் கேட்டேன். அவர்களும் தெரியாதென்றே சொல்கிறார்கள். நாம் அநுசரிக்கும் வழக்கங்களில் பலவற்றின் ஆபாசப் பொருளை மேனாட்டார் மூலமாக நாம் அறியவேண்டி வருகிறது. சிவலிங்கத்துக்கு ஆபாசப் பொருள் ஒன்று உண்டென்று கிறிஸ்தவப் பாதிரிமார் எழுதிய புத்தகத்திலிருந்துதான் நான் முதன் முதலில் அறிந்தேன். இப்போதுகூட நான் சிவலிங்கத்தைப் பார்க்கும்போது அஃது ஆபாசப் பொருளுக்கு இடந்தருவதாகத் தோன்றவில்லை. பூரி கோயிலின் கோபுரத்தில் ஆபாசப் பதுமைகள் இருப்பதாகவும் பாதிரிப் புத்தகமொன்றில்தான் நான் படித்தேன். நான் பூரிக்குச் சென்ற போது பிரயாசையின் மீது தான் அவற்றைப் பார்க்க வேண்டியிருந்தது. கோயிலுக்கு வரும் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு அவற்றைப்பற்றி ஒன்றுமே தெரியாதென்பதில் சந்தேகமில்லை. எனினும், சமூகத்தில் நமக்குத் தெரியாமல் உள்ள அழுக்கை எடுத்துக் காட்டுபவர் மீது நாம் கோபித்துக் கொள்ள வேண்டாம். சுகாதாரக் கேடு, குழந்தைமணம் முதலியவற்றைக் குறித்து மிஸ் மேயோ மிகைப் படுத்தியே கூறுகிறார் என்பதில் ஐயமில்லை. ஆனால் அது சமூகக் குறைபாடுகளை ஒழிப்பதில் நாம் இன்னும் அதிக முயற்சி எடுத்துக் கொள்ள ஒரு தூண்டுகோலாக இருக்கட்டும். அன்னிய நாட்டாரில் நம்மை ஆதரித்துப் பேசுகிறவர்களைவிட நம் மைக்குறை கூறுபவர்களிடமிருந்தே நாம் அதிகம் கற்றுக்கொள்ளக்கூடும். அவதூறுக் களஞ்சியமான இப்புத்தகத்தின்மீது நமக்கெழும் ஆத்திரத்தில் நமது குறைகளை மறந்துவிடக்கூடாது. நம் கோபம் மிஸ் மேயோவை ஒன்றுஞ் செய்யாது; நமக்கேதான் தீங்காய் முடியும். அவர் எழுதியுள்ளவை எல்லாம் பொய் யென்று ஸ்தாபிக்க நாம்முயலவேண்டாம். அப்புத்தகத்துக்கு விரோதமான கிளர்ச்சி சிறிது அளவுமிறியே போவதாகத் தோன்றுகிறது. துளசிதாஸரின் அழகிய பாட்டு ஒன்றின்கருத்தைத் தந்து இதை முடிக்கிறேன்:— "ஆண்டவனுல் படைக்கப்பட்ட ஒவ்வொன்றிலும் நல்லதும் உண்டு; தீயதும் உண்டு. அறிவுடைய மனிதன், தண்ணீரை விடுத்துப்பாலை அருந்தும் அன்னப்பறவையைப்போல் தீயதை விடுத்து நல்லதையே ஏற்பான்."

## மைசூரில் கதர் உற்பத்தி

### அரசாங்கத்தின் முயற்சி

மகாத்மா காந்தி பங்களூரில் தங்கியிருந்தபோது, மைசூர் அரசாங்கத்தார், சமஸ்தானத்தில் கதர் உற்பத்திக்கு ஒரு திட்டம் போட்டுத் தந்தால் அதை நடத்தி வைப்பதாக வாக்களித்திருந்தார்களாம். இதற்காக மகாத்மா உடனே ஸ்ரீ சங்கர்லால் பாங்கரை வரவழைத்தார். ஸ்ரீ பாங்கர், சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாருடனும், கங்காதர ராவ் தேஷ்பாண்டேயுடனும் மைசூர் முழுவதும் சுற்றி நஞ்சன்காடு தாலூகாவிலுள்ள படநாவல் என்னுமிடம் கதர் உற்பத்திக்குப் பெரிதும் ஏற்றது என்று முடிவு செய்தார். இங்கே பழைய காலத்து இராட்டைகள் இன்னும் சில வேலைசெய்து கொண்டிருக்கின்றனவாம். உடனே ஸ்ரீ சங்கர்லால் கதர் உற்பத்தித் திட்டம் ஒன்று தயாரித்து மைசூர் அரசாங்கத்துக்கு அனுப்பிவைத்தார். அவர்கள் அதை ஏற்று ஓர் உத்திரவும் பிறப்பித்துள்ளார்கள். அதன் சாராம்சமாவது:—

"நூல் நூற்றல் என்னும் குடிசைத் தொழில் வெற்றியுடன் நடக்கவேண்டுமானால் அதற்குச் சில சௌகரியங்கள் கூடியிருக்க வேண்டும். நூற்ற நூலை நெய்வதற்கும், துணியை விற்பதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்க வேண்டும். நூற்பவர்களுக்குக் கைமேல் கூலி கிடைக்கவேண்டும். இந்த வேலைகளெல்லாம் நஷ்டமின்றி நடைபெற வேண்டும். ஓரிடத்தில் இத்தகைய ஸ்தாபனம் ஏற்பட்டு நன்கு வேலை செய்தால் அது சமஸ்தானம் முழுவதிற்கும் ஓர் உதாரணமாகப் பயன்படும்.

"நஞ்சன்காடு தாலூகாவில் உள்ள படநாவலில் இத்தகைய கதர் உற்பத்தி ஸ்தலம் ஒன்றை ஏற்படுத்தலாமென்று அரசாங்கத்தார் கருதுகிறார்கள். சுற்றுப்புறத்திலுள்ள பல கிராமங்களும் இந்த ஸ்தலத்தில் வரவசச் சேர்க்கப்படவரும். இந்தப் பிரதேசத்தில் பருத்தி விளைகிறது. பழைய இராட்டைகள் இன்னும் சில வேலை செய்து வருகின்றன. சில ஆதிகருநாடக குடும்பத்தார் இராட்டை நூலை நெய்து வருகிறார்கள். சர்க்கா சங்கத்தின் காரியதரிசியான ஸ்ரீ சங்கர்லால் பாங்கர் இந்த இடம் கதர் வேலைக்கு மிகவும் ஏற்றது என்று அபிப்பிராயப்படுகிறார்.

"இவ்விடத்தில் கதர் வேலை நடத்த ஒரு திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்ததின் பொருட்டு ஸ்ரீ பாங்கருக்கு அரசாங்கத்தார் கடமைப்பட்டிருக்கிறார்கள். அத்திட்டத்தின் படி, பருத்தி விளைவு காலத்தில் கொஞ்சம் பருத்தி சேகரித்து வைக்கப்படும். பஞ்சை நூற்பவர்களுக்கு விற்று நூலை விலைக்கு வாங்கிக் கொள்ளப்படும். நூல் உள்ளூர் நெசவுகாரர்களைக் கொண்டே நெய்யப்படும். துணியைச் சர்க்கா சங்கத்தார் பங்களூரிலும் அமெரிஷனுள்ள தங்கள் கடைகளின் மூலம் விற்றுத் தருவார்கள். ஒரு வருஷத்திற்குள் 500 இராட்டையும், 40 தறியும் வேலை செய்யுமென்றும் மாதம் 2000 ரூபா கதர் உற்பத்தியாகுமென்றும் எதிர்பார்க்கப்படுகின்றன. இவ்வேலைக்கு ஒரு வருஷத்திற்கு சம்பளம் முதலிய நிர்வாகச்செலவு ரூ. 2025 ஆகும். நஷ்டம் வராதென எதிர்பார்க்கப்படுகிறதாயினும், முதல்வருஷத்தில் நஷ்டத்திற்கு 500 ரூபா எடுத்துவைப்பது நலமென்று கருதப்படுகிறது. எனவே மொத்தச் செலவு ரூ. 2525 ஆகும். இதைத் தவிர பருத்தி சேகரித்து வைத்தல், நூல் வாங்குதல், அணி கட்டுக்கடை ஆகிய இனங்களுக்கு முதல் தவணையாக ரூ. 3500 மூலதனம் வேண்டும்.

"அரசாங்கத்தார் மேற்கண்ட திட்டத்தை ஒப்புக்கொண்டு, கைத்தொழில் இலாகா தலைவரை உடனே வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி கட்டளையிடுகிறார்கள். இவ்வேலை, கைத்தொழில் இலாகாவின் நேரான மேற்பார்வையில் நடைபெறும். மேற்படி இலாகாதலைவர் உடனே ஸ்ரீ பாங்கருக்கு எழுதிப் பயிற்சி பெற்ற மனிதர்களைத் தருவித்துக் கொண்டு வேலை துவங்க வேண்டியது. 75 ரூபா சம்பளத்தில் விசேஷ நிர்வாகி ஒருவரையும், 50 ரூபா சம்பளத்தில் ஒரு மானேஜரையும் தருவதாக அவர் வாக்களித்திருக்கிறார். நிர்வாகச் செலவு ரூ. 2525-ம், மூலதனம் ரூ. 3500-ம், பொருளாதார அபிவிருத்தி முயற்சிகளுக்கென்று ஒதுக்கிவைக்கப்பட்ட ரூ. 1,25,000 த் திலிருந்து தரப்படும்.

"சர்க்காசங்கத்தின் காரியதரிசியும், மற்ற உத்தியோகஸ்தர்களும் மேற்படி ஸ்தாபனத்தை அடிக்கடிவந்து பரிசீலனை செய்யலாம். அவர்களுடைய யோசனைகள் வரவேற்கப்பட்டுச் சாத்தியமானவை ஏற்றுக் கொள்ளப்படும். இவ்விஷயத்தில் உதவி செய்ததின் பொருட்டு ஸ்ரீ சங்கர்லால் பாங்கருக்கு அரசாங்கத்தார் நன்றி செலுத்துகிறார்கள்."



# தமிழகத்தில் அடிகள்

## 13-9-1927
## மாயவரம்

11௳ இரவு மகாத்மாகாந்தி சிதம்பரத்திலிருந்து மாயவரம் வந்து சேர்ந்தார். அங்கு ஸ்ரீமான் எஸ். தில்லைநாயகம் பிள்ளையின் "ரங்கவிலாஸ்" என்னும் பங்களாவில் தங்கினார். மறுநாள் 12௳ திங்கட்கிழமை மௌன தினமாதலால் மகாத்மாவுக்கு அன்று அலுவல் எதுவும் இல்லை. 13௳ மாலை ஸ்ரீ என். லக்ஷ்மண முதலியார் தலைமையில் கூடிய இசை வேளாளர் மகாநாட்டின் பிரதிநிதிகள் மகாத்மாவைக்காணச் சென்றனர். இளம்பெண்களைக் கோயில்களுக்குப் பொட்டுக் கட்டித் தீய வாழ்வுக்குட்படுத்தும் வழக்கத்தைப் பற்றி மகாத்மாவுக்கு விவரமாகச் சொல்லப்பட்டது. அவர்களில், தங்கள் தீய வாழ்வை விடுத்துக் கைத்தொழில் செய்து பிழைக்க விரும்புவர்களுக்குத் தாம் உதவி செய்யத் தயாராயிருப்பதாய் மகாத்மா தெரிவித்தார். ஸ்ரீமதிகள் ஜனகத்தம்மாள், இராமாமிருதத்தம்மாள், சாவித்திரியம்மாள் என்னும் மூவரும் தங்கள் காதுகளில் அணிந்திருந்த பொன் வளையல்களை மகாத்மாவுக்கு அளித்தனர்.

பின்னர், மாலை 6-மணிக்கு இராஜந் தோட்ட மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. 15,000 ஜனங்களுக்கு மேல் வந்திருந்தனர். கூட்டத்தில் அமைதி நிலவியது. நகரசபை, தாலூகா போர்டுகளின் வரவேற்புப் பத்திரங்களும் மற்றும் பல உபசார பத்திரங்களும் சமர்ப்பிக்கப்பட்டன. பொது ஜனங்களின் சார்பாக ரூபா 2000 மும், ஸ்ரீமான் ஆர். சின்னையாபிள்ளை தாம் சொந்தமாக ரூ 500-ம் மற்றும் சில்லரைப் பண முடிப்புகளும், ஆகமொத்தம் ரூ 3258 மகாத்மாவுக்கு அளிக்கப்பட்டது. அடிகள் அளித்த பதிலில், தமது பலவீனங் காரணமாக ஓய்வு அவசியமாயிருப்பதால் எல்லாரையும் தனித்தனியாகப் பார்த்துப் பேச முடியாமலிருப்பதற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, 1915-ம் ஆண்டில் மாயவரத்தில் "சுதேசி இயக்கத்தை"ப்பற்றித் தாம் பேசியதை ஞாபகப்படுத்தி விட்டு மேலே கூறியதின் சாராம்சமாவது:—

### நகர சுகாதாரம்

"இன்று மாலை எனக்கு மிகவும் பிரியமான ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசப்போகிறேன். இச்சுற்றுப் பிரயாணத்தில் அதைக் குறித்து நான் இதுவரையில் பேசவில்லை. அவ்விஷயம் நகர சுகாதாரமாகும். நான் இங்கே தங்கியுள்ள வீட்டுக்குக் கொஞ்ச தூரத்தில் ஓர் அழகிய குளமும், அதனருகில் தோப்பும் இருப்பதாகக் காணப்பட்டன. இன்று காலை அவ்வழியே சென்று உலாவிவிட்டு வரலாமென்றெண்ணிப் போனேன். சிறிது தூரம் சென்றதும் அங்கு ஆற்றின்மீது போடப்பட்டிருந்த மூங்கில் பாலம் என் மனதைக் கவர்ந்தது. அதன் வழியே நதியைக் கடந்து சென்று வலது புறம் திரும்பினேன். அப்போது, இங்கே சொல்லக் கூடாத மகாபயங்கரமான காட்சியைக் கண்டேன். அந்தக் குட்டையிலிருந்து பொறுக்க முடியாத துர் நாற்றம் வந்து கொண்டிருந்தது. அக்குட்டையை ஒருவன் மிக அருவருப்பான முறையில் அசுத்தப்படுத்திக் கொண்டிருந்தான். அதே தண்ணீரை ஒரு ஸ்திரீ தன்குடத்தில் மொண்டு கொண்டிருந்தாள். எனவே, நான் திரும்பிவந்து; காலையில் என் வழக்கப்படி உலாவுவதற்காக மோட்டாரில் ஏறிச் சில மைல் தூரம் போக வேண்டியிருந்தது. என் இதயம் புண்ணுயிற்று. 1915ல் சென்னை வீதிகளில் நான் கண்ட காட்சிகள் நினைவுக்கு வந்தன. இந்நிலைமையில் ஏதோ பயங்கரமான தவறிருக்கிற தென்பது நிச்சயம்.

நகரவாழ்வின் முதன்மையான தேவை சுகாதார வசதியும், தூய தண்ணீருமாகும். இவ்விரண்டுக்கும் ஏராளமான பணம் வேண்டுமென நினைக்கவேண்டாம். உங்களுக்குவிருப்பம் மட்டுமிருந்தால் இவ்விரண்டையும்பணச் செலவு அதிகமில்லாமலேபெறலாம். நகரசபை அங்கத்தினர் தங்கள் பொறுப்பை நன்குணர வேண்டும். நகரசபை அங்கத்தினர் பதவியை ஒரு கௌரவமாகக் கருதுதல் கூடாது ஊழியம் செய்யத்தயாராயில்லாதவர்கள். நகரசபைக்கு வரக்கூடாது. ஆனால் பத்திரிகைகளில் நகரசபைத் தேர்தல் போட்டிகளும், அவற்றினின்று மூளைக்கும் பிராமணர் - அல்லாதார் சண்டைகளுமே காணப்படுகின்றன. நீங்கள் (நகரசபை அங்கத்தினர்) மாயவரம் மகாஜனங்களின் ஊழியர்கள் என்பதையும், நகரத்தைச் சுகாதாரக்கேடு சிறிதுமின்றி வைத்திருக்கும் பொறுப்பு உங்களுடையதென்பதையும் நீங்கள் நினைவு கூர்ந்தால், உடனே கையில் விளக்கு மாற்றுடன் வீதிகளைச் சுத்தம் செய்யப் புறப்படுவீர்கள். தண்ணீரைச் சுத்தமாய் வைத்திருக்கவும் முயல்வீர்கள். நீங்கள் எவ்வளவோ பள்ளிக்கூடம் வைத்து நடத்துகிறீர்கள். அவற்றிற்கு ஒரு நாள் விடுமுறை கொடுத்து, மாணுக்கர்களைப் போய் வீதிகளைச் சுத்தம் செய்யச் சொல்லுங்கள். அப்படியே ஜனங்களுக்கும் போதித்து வரச்செய்யுங்கள். பள்ளிக்கூடங்களில் சுகாதாரத்தைப் பற்றி நாம் கற்கும் பாடங்களை நாம் நடைமுறைக்குக் கொண்டு வந்தாலன்றி அப்பாடங்களால் யாது பயன்?

### ஒடுக்கப்பட்டவர்கள்

நமது ஜனங்கள் இத்தகைய சீர்திருத்தங்களுக்குச் செவிகொடுக்க மாட்டார்களென்றும் தங்கள்வழக்கங்களைமாற்றிக்கொள்ளமாட்டார்களென்றும் சொல்ல வேண்டாம். நான் பிறந்த நகரத்தின் வீதிகளில் 50 ஆண்டுகளுக்கு முன்பு சாணி மேடுகள் ஏராளமாய் இருந்தன. அப்போது ஆங்கிலேய நிர்வாகி ஒருவர் வந்து சேர்ந்தார். அவர் ஒரே நாளில் அச்சாணி மேடுகளை அப்புறப்படுத்தி விட்டார். இதற்காக அவர் ஜனங்களைப் பலவந்தம் எதுவும் செய்யவில்லை. அவர்களுடன் வாதிட்டு அவர்கள் மனதை மாற்றியே இச்சீர்திருத்தத்தைச் செய்தார். பிரிட்டிஷ் நிர்வாகத்தை நான் அடியோடு எதிர்ப்பவனுயினும், சுகாதார விஷயத்தில் பிரிட்டிஷாரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டுவது அதிகமுண்டென ஒப்புக்கொள்கிறேன். உங்கள் மயக்கத்தினின்று எழுந்து தைரியமாகக் காரியம் செய்யுங்கள்; வெற்றி பெறுவீர்கள்.

இனி நான், ஒடுக்கப்பட்ட வகுப்பாரின் உபசாரப்பத்திரத்துக்குச் செல்ல வேண்டும். மற்றவிடங்களில் அளிக்கப்பட்ட பத்திரங்களைப்போல் சமுதாய வாழ்விலுள்ள குறைபாடுகளைப்பற்றிச் சொல்லாமல், இப்பத்திரம் பொருளாதாரக் குறைபாடுகளைப்பற்றியே அதிகமாகச் சொல்கிறது. நிலச்சுவான்தார்கள் மீதும், ஆட்சிமுறையின் மீதும் அது கடுங்குற்றங்களைச் சுமத்தியிருக்கிறது. உயிர்வாழ்வதற்குக் குறைந்தது வருஷம் 120 ரூபா வேண்டுமென்றும், தங்கள் சராசரி வருஷ வருமானம் ரூ. 40 தானென்றும் அவர்கள் சொல்லுகின்றனர். இவற்றின் உண்மையைப்பற்றி நான் நன்கு ஆராய்ச்சி செய்தே முடிவு காணவேண்டும். ஆனால் அவர்களிடம் எனக்குப் பூரண அநுதாப முண்டென்று இப்போது கூறுவேன். இந்நாட்டில் நிலத்துக்கு முதன்மையாக உரியவர்கள் தாங்களே என்று அவர்களே கூறுவதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அவர்கள் தங்கள் நிலைமையையெண்ணிச் சோகத்தில் கிடக்கவேண்டுவதில்லை. நாட்டில் ஏற்பட்டிருக்கும் புதிய உணர்ச்சியானது அவர்களுக்கு நன்மை தராமற்போகாது. தன் கையே தனக்குதவி யென்னும் உண்மையை அவர்கள் உணரவேண்டும். தாங்கள் யாருக்கும் அடிமையில்லையென்பதை அவர்கள் எப்போது உணர்கிறார்களோ அப்போது அவர்களுக்கு வெற்றி நிச்சயம். நிலச்சுவான்தார்களுக்கு ஒரு வார்த்தைசொல்கிறேன். இவ்வுபசாரப்பத்திரத்தில் குறிப்பிட்டுள்ள புகார்கள் உண்மையானால் அவர்களுக்கு அது பெரிதும் அபகீர்த்திதருவதாகும் தங்களைத்தாங்கும் தோள்களை அவர்கள் காலால் மிதித்து நசுக்க வேண்டாம். பொட்டல் வயல்களைக் கிளி கொஞ்சும்படி பயிர் செய்யும் தொழிலாளிகளை உங்களுடைய சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதுங்கள். அவர்களைத் "தீண்டாதார்" என்று எண்ணுவது பாவமாகும். இந்த அவமானத்தைத் தீர்த்துக் கொள்வோமாக.

### தேவதாசிகள்

மற்றொரு விஷயத்தைப்பற்றியும் இன்று நான் பேசவேண்டியிருக்கிறது. இன்று மாலை தேவதாசிகள் எனப்படும் சகோதரிகள் சிலரை நான் சந்தித்தேன். அவர்களிடம் பேசிக் கொண்டிருந்த போது இந்த ஏற்பாட்டின் உட்கருத்து எனக்குப்புலப்பட்டது. அவர்களைத் "தேவதாசி"கள் என்று அழைக்கும்போது நாம் கடவுளையே அவமதிக்கிறோம். இச்சகோதரிகளைத் தங்கள் காமத்துக்குக் கருவியாகப் பயன்படுத்திக் கொண்டு அதே சமயத்தில் கடவுளின் பெயரைச்சொல்வது இருவகைப்பட்ட பாதகமாகும். இத்தகைய துன்மார்க்கத்துக்கென்று ஒரு வகுப்பாரும், இவர்களைப் பயன்படுத்திக்கொண்டு இந்த ஏற்பாட்டைச் சாசுவதமாகச் செய்யக்கூடிய மற்றொரு வகுப்பாரும் இந்நாட்டில் இருப்பதை எண்ணும்போது நமக்கு வாழ்வின் மீதே வெறுப்பு உண்டாகிறது. நமது சொந்தச் சகோதரிகளுக்கும் அவர்களுக்கும் வித்தியாசம் என்ன? நான் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது அவர்கள் கண்களில் தீமை எதையும் காணவில்லை. உலகில் வேறெந்த ஸ்திரீயையும் போல் அவர்களிடமும் தாயுணர்ச்சிகள் உண்டாதல் சாத்தியம் என அறிந்தேன். நமது சொந்த சகோதரிகளை இத்தகைய துன்மார்க்கத்துக்கு விடுவோமா? இவர்களை மட்டும் பின்னர் எப்படி துன்மார்க்கத்துக்கு உபயோகிக்கலாம்? இந்தத் தீமையானது ஹிந்து சமூகத்தின் அடிப்படையை அரித்து வருகிறது. அவர்களில் பலர் சில நிபந்தனைகளின் மீது தங்கள் தற்போதைய வாழ்வை விட்டு விடுவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு உதவி செய்வதாக நான் வாக்களித்திருக்கிறேன். அவர்கள் தங்கள் வாக்குறுதியை நிறைவேற்ற வில்லையானுல் அதற்காக அவர்களைக் கடிந்துகொள்ளேன். அவர்கள் அத்தகைய வாழ்வு வாழ்வதைச் சாத்தியமாகச் செய்யும் சமூகத்தையே குறை கூறுவேன். ஆண்மகன் தன் காமத்தை அடக்கி ஆள்வானுயின், சமூகம் இவ்வழக்கத்தை அநாதரவு 'செய்யுமாயின், அவர்கள் சீர்திருந்துவார்கள் என்பது நிச்சயம். நான் இங்குத் தங்கிய இரண்டு தினங்களில் எனக்கு ஒரு குறைவும் இல்லாதபடி கண்பர்கள் பார்த்துக் கொண்டார்களாயினும், இந்த தேவதாசி பிரச்னையானது இந்த இரண்டு தினங்களையும் எனக்குத் துக்க தினங்களாகச் செய்துவிட்டன. அந்த துக்கத்தை நீங்களும் பகிர்ந்துகொண்டு என் யோசனைகளை ஏற்று என் கவலை குறையும்படி செய்ய வேண்டுகிறேன்."

கூட்ட முடிவில், கதர்நிதி எப்படி உபயோகிக்கப்படுகிறது என்று ஒருவர் கேட்டார். மகாத்மா விவரமாகப் பதிலளிக்கையில், கதர்த் தொண்டரின் சம்பளம் முதலிய நிர்வாகச் செலவு 100க்கு 20முதல் 25வரை ஆகுமென்றும், இதை 100க்கு 15 வீதத்துக்குக் கொண்டுவந்து விட முயற்சி செய்யப்படுகிறதென்றும், பாக்கி முழுவதும் நூல் நூற்கும் ஏழை ஸ்திரீகள் 50,000 பேருக்கும், நெசவுத் தொழிலாளர் 5000 பேருக்கும் போய்ச் சேர்கிறதென்றும் கூறி முடித்தார்.

## 14-9-1927
## கும்பகோணம்

இன்று காலை மகாத்மாகாந்தியும், அவர் சகாக்களும் மாயவரத்திலிருந்து புறப்பட்டுத் திருவிடை மருதூரில் இறங்கிக் கும்பகோணம் சேர்ந்தார்கள். அங்கு அடிகள் ஸ்ரீ பந்துலு ஐயர் வீட்டில் தங்கினர். மாலையில் நடந்த பொதுக்கூட்டத்தில் நகரசபை, தாலூகா போர்டுகளின் சார்பாகவும், மற்றும் சில சங்கங்களின் சார்பாகவும் உபசாரப்பத்திரங்கள் அளிக்கப்பட்டன. பொதுஜனங்களின் பணமுடிப்பு ரூ 1000மும், ஸ்ரீமான் பந்துலு ஐயர் தாம் சொந்தமாக ரூ 600ம், ஒரு வெள்ளித்தட்டும், சௌராஷ்டிரர்கள் ரூ 350 ம், திருவாதுறைப் பண்டார சந்நதி ரூ 200 ம், சில்லரைப் பணமுடிப்புகளுமாக மொத்தம் ரூ 2500க்கு மேல் தரப்பட்டன. அடிகள் நிகழ்த்திய உபந்யாசத்தில், மாணுக்கர்கள் தாம் தனியாக அவர்கள் கூட்டத்தில் பேச வேண்டுமென வற்புறுத்தாதது குறித்து நன்றி தெரிவித்து, மாணுக்கர்க்குத் துயநடக்கை அத்தியாவசியம் என அறிவுறுத்தி, சுகாதார விஷயத்தில் நகர சபைகளின் கடமையைக் குறிப்பிட்டுவிட்டு மேலே பேசியதாவது:—

### பண்டிதர்களின் கோபம்

"பச்சையப்பன் கலாசாலையில் நான் மாணுக்கர்களுக்கு என் இதயபூர்வமாய்க் கூறிய சில மொழிகள் இங்குள்ள பண்டிதர்களுக்குக் கோபமளித்திருப்பதாக அறிகிறேன். தீர்க்கமாக ஆலோசனை செய்த பின்னர் நான் அப்புத்திமதிகளைச் சொன்னேன். அவற்றில் ஒருவார்த்தையை யேனும் மாற்றுவதற்கு எனக்கு அவசியம் புலனாகவில்லை. ஸநாதன தர்மியாகிய நான், தீர யோசனைசெய்து சொல்வதென்னவென்றால், தற்போது நாம் அநுசரிக்கும் தீண்டாமைக்கு ஹிந்து மதத்தில் ஆதாரமில்லையென்பதே. அது ஹிந்து சமூகத்துக்கே ஒரு களங்கமாகும். "சத்திய நாஸ்தி" பரோ தர்ம:" "அஹிம்ஸா பரமோ தர்ம:" என்னும் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு மதம் பிறப்பினுல் தீண்டாமையை ஆதரிக்க முடியாது. அத்தகைய மதத்தில் குழந்தை விதவைகளுக்கும் இடம் கிடையாது. பச்சைக் குழந்தைகளைக் கலியாணம் செய்துகொடுத்தலைக் கலியாணம் என்றே நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். குழந்தை மணம் என்பது அசம்பாவிதமானதால் குழந்தை விதவைகளும் இருத்தல் முடியாது என்று நான் கூறுகிறேன்.

கலியாணம் செய்து கொள்ள விரும்பும் மாணுக்கர்கள், குழந்தைப் பருவத்திலேயே விதவையாகிப் பின்னர் வயது வந்தவர்களாயுள்ள பெண்களை மணம் செய்து கொண்டால் புண்ணியம் செய்தவர்களாவார்கள் என்று மீண்டும் கூற நான் சிறிதும் தயங்கேன். குழந்தைகளை மணஞ் செய்துகொள்ள மறுப்பதால் குழந்தை விதவைகள் ஏற்படாமலே தடுப்பார்களாயினும் அவர்கள்நாட்டுக்குச் சிறந்த தொண்டு இயற்றியவர்களாவார்கள். ஒரு காரியம் அதர்மமான தென்றும், அநீதியற்ற தென்றும், அநியாயமான தென்றும் நமக்கு நன்கு தெரிந்திருக்கும்போது, சுத்தக்கிடமான சம்ஸ்கிருத சுலோகங்களை ஆதாரமாகக்காட்டி அதைச் செய்வது தவறாகும். சாஸ்திரங்களை நம்மை மேன்மைப்படுத்தவும், நமது வழியில் ஒளிகாட்டவுமே ஏற்பட்டன. தேவதாசித்தனம் என்னும் தீய முறைக்கும், மதத்தின் பெயரால் குழந்தைகளை ஆயுள்பரியந்தம் அயவாழ்க்கையில் ஆழ்த்துவதற்கும் யார் தான் தர்மமான காரணம் சொல்ல முடியும்?

### "குற்றவாளியே"

கிறிஸ்தவர்களிடமும், முஸ்லிம்களிடமும் பேசும்போது நான் தாட்சண்யத்துடன் பேசுவதாகவும், ஹிந்துக்கள் கூட்டத்தில் பேசும் போது மட்டும் ஹிந்து மதத்தையும், ஹிந்து சமூகக் குறைபாடுகளையும் தாட்சண்ய மின்றிக் கண்டித்துப் பேசுவதாகவும் என் மீது குற்றஞ் சுமத்தப்படுகிறது. இஃது ஒரு குற்றமானுல், நான் குற்றவாளியேயென்று ஒப்புக்கொள்கிறேன். ஹிந்து மதத்தைப்பற்றி எனக்குத் தெரிந்த அளவு மற்ற மதங்களைப்பற்றித் தெரியாது. நான் எவ்வளவுதான் கல்லெண்ணத்துடன் பேசினுலும் கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும் தப்பர்த்தம் செய்துகொள்ளக்கூடும். ஆனால் எனது ஹிந்து சமூகத்தார் அப்படித் தப்பர்த்தம் செய்து கொள்வார்கள் என்னும் பயம் எனக்கில்லை. மரியாதையை முன்னிட்டும் நான் கிறிஸ்தவர்களிடமும், முஸ்லிம்களுடனும் தாட்சண்யத்துடனேயே பேசவேண்டும். ஆனால் ஹிந்துக்களின் கூட்டங்களில் அவர்களுடைய குறைகளைக் குறித்துத் தாட்சண்யம் காட்டினேனுயின் முற்றும் தவறு செய்தவனுவேன். நான் பொதுவாழ்வில் ஈடுபட்ட இத்தனை காலத்திலும், ஹிந்துக்கள் என்மீது அதிகமாய்த் தப்பபிப்பிராயங்கொண்டதில்லை யென்று மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். ஆனால் ஹிந்துக்களுடைய அபிமானத்தை நான் இழப்பதாகவே இருந்தாலும் சரி, நான் எனது கடமையைச் செய்தேயாக வேண்டும். அநாவசியமாகக் கோபமூட்டாமலும், அநாவசியமாக வருத்தம் தராமலும் இயன்ற ஜாக்கிரதை யெடுத்துக்கொண்டு, என் உணர்ச்சிகளை உண்மையுடன் வெளியிட்டே தீரவேண்டும். எனவே, இவ்விடத்திலுள்ள பண்டித சிரோமணிகள் எல்லாரையும், சிந்தனா சக்தியுள்ள ஹிந்து ஸ்திரீ புருஷர்களையும் நான் தாழ்மையுடன் கேட்டுக்கொள்வதாவது:—தீண்டாமை, குழந்தைமணம், குழந்தை விதவைகள், தேவதாசிகள் என்னும்இப்பிரச்னைகளைப்பற்றிப் புனராலோசனை செய்யுங்கள்; எல்லையில்லாக் கடுந்தவமியற்றிய மகரிஷிகள் கண்ட ஹிந்துமதத்தில் இத்தகைய ஏற்பாடுகளுக்கு ஆதாரமிருக்கமுடியுமா என்று சிந்தியுங்கள்.

இராட்டை இயக்கத்தின் அவசியத்தைப் பற்றி உங்களுக்குள் அபிப்பிராய பேதமில்லையெனக்கண்டு மகிழ்கிறேன். ஆனால் எனக்குச் சிறிது பணங்கொடுப்பதும், சில சமயங்களில் சிலர் கதரணிவதும் போதா. ஏழைகளிடம் உங்களுக்கு இரக்கமிருந்தால் எப்போதும் நீங்கள் கதரே அணியவேண்டும். பூரண மது விலக்குக்கும் உழைக்கவேண்டும்."

## 15-9-1927
## மன்னார்குடி

இன்று காலை மகாத்மாகாந்தி கும்பகோணத்திலிருந்து மோட்டார் வண்டியில் மன்னார் குடிக்குப் புறப்பட்டார். வழியில் வலங்கிமானில் "ஸ்ரீனிவாச சாஸ்திரியார் இலவசவாசகசாலை"யைத் திறந்துவைத்தார். அங்கு ரூ 250ம், நீடாமங்கலம், இராஜப்பய்யன் சாவடி என்னுமிடங்களில் முறையே ரூ 104ம், ரூ. 294ம் கொண்டபணமுடிப்புகள் அளிக்கப்பட்டன. மன்னார்குடியில் மகாத்மா ஸ்ரீ சடகோப முதலியார் பங்களாவில் தங்கினர். காலையில், நேஷனல் ஹைஸ்கூலில் மாணுக்கர்கள் கூட்டம் ஒன்று நடந்தது. ரூ 250 கொண்ட பணமுடிப்பு அளிக்கப்பட்டது. பகவத்கீதை படித்து அதன் உபதேசங்களுக்கிணங்க வாழ்க்கை நடத்தவேண்டுமென்று அடிகள் அவர்களுக்கு உபதேசித்தார்.

பின்னர், அடிகள் பிண்ட்லே கலாசாலைக்குச் சென்றார். அங்கு மாணுக்கர்கள் ரூ. 304 பணமுடிப்பு அளித்தனர். கலாசாலைத் தலைவர் ஸ்மைல்ஸ் பாதிரியார் மாணுக்கரின் உபசாரப் பத்திரத்தைப் படித்தார். அதில், கலாசாலையில் "தீண்டாதார்" எனப்படும் வகுப்பைச் சேர்ந்த பலர் படிப்பதாகவும், மகாத்மாவைப் போலவே தாங்களும் தினந்தோறும் பைபிள் படித்து வருவதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தன.

### கடவுளும் மனிதனும்

மகாத்மா அளித்த பதிலின் சாரம் வருமாறு:— "உங்கள் கலாசாலையில் "தீண்டா" வகுப்பைச் சேர்ந்த மாணுக்கர் இருப்பது குறித்து உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன். உங்கள் முயற்சியினுலேயே அவர்

கள் சேர்க்கப்பட்டார்களென்று அறிந்து அதிக மகிழ்ச்சி யடைகிறேன். மற்ற கல்வி ஸ்தாபனங்களும் உங்களுடைய உதாரணத்தைப் பின்பற்றினால் எவ்வளவோ நலமாயிருக்கும். கல்விஸ்தாபனங்களை அவர்களுக்குத் திறந்து விடுவது மட்டும் போதாது. விசேஷ முயற்சி செய்து அவர்களைச்சேர்க்கவும் வேண்டும். உங்களைப்போல் நான் தினந்தோறும் பைபிள் படிப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆனால் தாழ்மைக் குணத்துடனும் பயபக்தியுடனும் அதைப் படித்திருக்கிறேன் என்று சொல்லக்கூடும். நீங்களும் அத்தகைய மனப்பான்மையுடன் அதைப்படிக்க வேண்டுமென விரும்புகிறேன்.

உங்களில் மிகப் பெரும்பான்மையோர் ஹிந்து சிறுவர்கள். எனவே நீங்கள் தினந்தோறும் பகவத்கீதை படிப்பதாகச் சொல்லி யிருந்தீர்களானால் மிகுதியும் மகிழ்ச்சி யடைந்திருப்பேன். உலகிலுள்ள எல்லா மதங்களும் ஏறக்குறைய சத்தியமானவை என்று நான் நம்புகிறேன். "ஏறக்குறைய" என்று ஏன் சொல்கிறேனென்றால், மனிதன் கைபட்டதெதுவும் பரிபூரணமானதா யிருக்கமுடியாது. மனிதன் குறையுள்ளவனாதலால், மனிதன் தொட்டதெதுவும் சிறிதேனும் குறையுள்ளதாகவே இருக்கும். கடவுளே பரிபூரணமானவர். அவர் இத்தகையவரென விவரிக்க வொண்ணாதவர். மனிதன் ஒவ்வொருவனும் கடவுளைப் போல் பூரணத்வ மடைய முடியுமென்று நான் நம்புகிறேன். அப்பரிபூரண நிலையை நாம் ஒவ்வொருவரும் இலட்சியமாகக் கொள்ள வேண்டுவது அவசியம். ஆனால் அந்நிலை எய்தப் பெற்று விட்டால் அது விவரிக்க வொண்ணாததாகி விடுகிறது. ஆகையினால்தான் எழுத்திலுள்ள வேதமும், குர் ஆனும், பைபிளும், ஆண்டவன் வாக்கேயாயினும் குறையுள்ளவை என்று மிகத் தாழ்மையுடன் நான் சொல்கிறேன்.

### பண்டைத் தருமம்

காமக்ரோதாதிகளால் அலைக்கப் பெறும் குறையுள்ள மனிதர்களாகிய நாம் ஆண்டவனின் குறையுள்ள வாக்கையும் பூரணமாய் அறிந்து கொள்ள இயலாதவர்களாயிருக்கிறோம். ஆகையினால் தான் ஹிந்து சிறுவர்களைத் தங்கள் பரம்பரைத் தர்மங்களை அடியோடு புறக்கணிக்கவேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். அவ்வாறே முஸ்லிம் சிறுவர்களையும், கிறிஸ்துவச் சிறுவர்களையும் வேண்டிக் கொள்கிறேன். பைபிளையும் குர் ஆனையும் ஹிந்து சிறுவர்கள் படித்தல் நலந்தான். ஆனால்அவர்கள் பகவத்கீதைபடித்தல் அத்தியாவசியம். தற்போது பிள்ளைகளிடம் காணப்படும் தூய்மைக் குறைவு முதலிய பல குறைபாடுகளுக்குப் பரம்பரைத் தருமம் அழிவதே காரணமென்று நான் கருதுகிறேன். நான் சொல்வதைப் பிழைபடக் கொள்ள வேண்டாம். பழையன எல்லாம் நல்லன என்று நான் சொல்லவில்லை. பண்டை வழக்கம் என்பதற்காக நமது அறிவைப்பயன் படுத்தக் கூடாதென்று நான் சொல்லவில்லை. ஒரு வழக்கம் எவ்வளவு பழைமைத்தாயினும் அஃது ஒழுக்கநெறிக்கு மாறுபட்டதாயிருந்தால் உடனே அதை ஒழித்துவிட வேண்டுவதே. தீண்டாமை மிகப் பழைமையான வழக்கமாயிருக்கலாம். குழந்தைமணம், குழந்தை விதவைத்தனம் முதலிய ஏற்பாடுகளும், இன்னும் பல பயங்கரமான குருட்டுக்கொள்கைகளும் மிகப் பழையனவாயிருக்கலாம். எனக்குச் சக்தியிருந்தால் அவை எல்லாவற்றையும் ஒரே யடியாக ஒழித்து விடுவேன். இதிலிருந்து பண்டைத் தர்மத்தைக் கடைப்பிடித்தல் என்று நான் கூறுவதின் பொருளை நீங்கள் நன்குணர்வீர்கள். ஆகையினால்தான் பைபிளிலும், குர்ஆனிலும் நான் காணும் கடவுளையே கீதையிலும் காண்கிறேனாயினும், ஹிந்து சிறுவர்கள் பகவத்கீதை படிப்பதினால் அதிக பயன் பெறுவார்களெனச் சொல்கிறேன்."

அடிகள் கதரியக்கத்தைப்பற்றிக் குறிப்பிட்டுத் தமது உபந்நியாசத்தை முடித்தார்.

### பொதுக்கூட்டம்

மாலை 6 மணிக்குப் பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. நகரசபை, தாலூகா போர்டுகளின் சார்பாகவும், பிரசங்கங்களின் சார்பாகவும் உபசாரபத்திரங்கள் வழங்கப்பட்டன. மன்னார்குடி தாலூகா வாசிகளால் ரூ. 1800 கொண்ட பணமுடிப்பும், திருத்துறைப் பூண்டி வாசிகளால் ரூ 136 கொண்டபண முடிப்பும் அளிக்கப்பட்டன. மகாத்மாவுக்கு அளிக்கப்பட்ட நகைகள் முதலியவற்றை ஏலம் போட்டதில் ரூ 262 கிடைத்தது. மகாத்மா தமது உபந்நியாசத்தில் மன்னார் குடி நெசவுக்குப் பெயர்போனதென்று தாம் வெகுநாளைக்கு முன்பே கேள்விப்பட்டிருப்பதாகவும், கைநூலன்றி வேறு நூல் நெய்யும் ஒரு நெசவுத் தொழிலாளிகூட மன்னார் குடியில் இல்லாத காலம் விரைவில் வருமென்று எதிர்பார்ப்பதாகவும் குறிப்பிட்டு, இராட்டை இயக்கம், தீண்டாமை விலக்கு, குழந்தை விதவைகளின் நிலை, மதுவிலக்குச் சட்டத்தின் அவசியம் முதலிய விஷயங்களைப் பற்றிப் பேசினார்.

பஜாஜ்வாசகசாலையில் ஸ்ரீ ஜம்னலால் பஜாஜின் உருவப்படம் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியினால் திறந்துவைக்கப்பட்டது.

## 16-9-27

## தஞ்சாவூர்

இன்றுகாலை மகாத்மாவும் அவரது சகாக்களும் மன்னார் குடியிலிருந்து தஞ்சாவூர் வந்து சேர்ந்தார்கள். இங்கு மகாத்மா உக்கடைத்தேவர் மாளிகையில் தங்கினார். ஜஸ்டிஸ் கட்சிப் பிரமுகர்களான ஸ்ரீமான்கள் பன்னீர் செல்வம், உமாமகேசுவரம் பிள்ளை, சின்னையா பிள்ளை முதலியோர் மகாத்மாவைக் கண்டு பிராமணரல்லாதார் இயக்கத்தைப்பற்றியும், மகாத்மாவின் வருணாசிரம தர்மக் கொள்கையைப்பற்றியும் நீண்ட நேரம் விவாதித்ததாகத் தெரிகிறது. மாலையில் பதினாயிரம் ஜனங்களுக்குமேல் அடங்கிய பெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஜில்லாபோர்டு, தாலூகாபோர்டு, நகரசபை முதலியவற்றின் சார்பாக உபசார பத்திரங்கள் அளிக்கப்பட்டன. ஆயிரம் ரூபாகொண்ட பண முடிப்பும் தரப்பட்டது. அடிகள் இங்கு நிகழ்த்திய முக்கியமான சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

"உங்கள் பத்திரங்கள் எல்லாவற்றிலும் நீங்கள் கதரியக்கத்தை ஆதரித்திருப்பது எனக்கு அளவற்ற மகிழ்ச்சி தருகிறது. இப்பத்திரங்களை வாசியாமல் என்னிடம் கொடுத்து விட்டது பற்றியும் உங்களுக்கு வந்தனமளிக்கிறேன். என்னுடைய பலவீனத்தை நீங்கள் அறிவீர்களானதால், இதற்காக உங்களிடம் எனக்குள்ள நன்றியினளவை நீங்கள் தெரிந்துகொள்ள முடியாது. உங்களுடைய இச்செயலினால் என் உடம்பில் பாக்கியுள்ள சிறிது பலத்தை என் இயக்கத்தை முன்னிட்டு மற்ற விடங்களுக்குச் செல்வதற்கு நீங்கள் பாதுகாத்துக் கொடுப்பவர்களாகிறீர்கள்.

### "திராவிடன்" புகாருக்குப் பதில்

ஏராளமாக விநியோகிக்கப் படுவதாகத் தெரியவரும் சிறு தமிழ்ப் பிரசுரமொன்றை நான் படித்தபோது வருத்தமும் வியப்பும் அடைந்தேன். "திராவிடன்" என்னும்பத்திரிகையில் வெளியான சில கட்டுரைகளைத் தொகுத்து அச்சிட்டு அத்துண்டுப்பிரசுரமாக வெளியிடப்பட்டிருக்கிறது. அதில் கூறப்படும் ஒரு புகார் என்னவென்றால், என்னுடைய பிராமண நண்பர்களும் சகாக்களும் என்னைச் சிறையிலிட்டுத் தனிமைப்படுத்தி ஒதுக்கி வைத்திருக்கிறார்கள் என்பதாகும். என்னுடைய இந்தப் பிராமண நண்பர்கள் தங்களுக்குப் பிடியாதவர்களை என்னைப் பார்க்க வொட்டாமல் தடுக்கிறார்கள் என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கூற்றில் சிறிதேனும் உண்மையில்லை யென்றுதான் உங்களுக்கு நான் சொல்லக்கூடும். அஹிம்சைக் கொள்கையில் நான் பூரண நம்பிக்கையுடையவனென உரிமை பாராட்டுகிறேனாயினும், சில சந்தர்ப்பங்களில் நான் எவ்வளவு தூரம் என் நெஞ்சைக் கல்லாக்கிக் கொள்ளவும்பிடிவாதமாய்இணங்க மறுக்கவும் கூடும் என்பதுகுறித்து உங்களுக்குத் தெரியாது. நான் எனது நண்பர்களின் விருப்பத்தின்படி நடப்பதாயிருந்தால், என் 'தரிசன'த்துக்கோ வேறு காரியத்துக்கோ வரும் ஜனக்கூட்டத்துடன் மல்லுக்கு நிற்கவேண்டிய தொல்லை அவர்களுக்கில்லாமற் போகும். அதுகுறித்து அவர்கள் சந்தோஷமே யடைவார்கள். ஆனால் நான் என் சக்தி இவ்வளவுதான் என அறிந்தவன்; என் உடல் பலவீனத்தை அறிந்தவன். ஆதலின் என்னைப் பார்க்க யாரையும் அழைத்து வரக்கூடாதென்றும், எனது ஓய்வு நேரத்தில் எவ்வித தொல்லையும் கொடுக்கக் கூடாதென்றும் என் நண்பர்களுக்குக் கண்டிப்பான கட்டளையிட்டிருக்கிறேன். அவ்வாறு அவர்களுடன் ஒப்பந்தமும் செய்து கொண்டிருக்கிறேன். நானும் நீங்களும் இதய பூர்வமாய் நேசிக்கும் இயக்கத்தின் நன்மைக்காகவே இவ்வாறு நான் என்னை யாரும் பார்க்க வொட்டாமல் செய்து கொண்டிருக்கிறேன்.

### கதர்நிதியின் விநியோகம்

ஆனால் அத்துண்டுப் பிரசுரத்தில் இதைவிடப் பெரிய மற்றொரு புகார் சொல்லப்பட்டிருக்கிறது. அது என் நண்பர்களைக் குறித்தது மட்டுமன்று; கதர் இயக்கத்தையே பற்றியதாகும். கதர் நிதிக்கென்று வசூலிக்கப்படும் பண முடிப்புகள் எல்லாம் முடிவில் என் பிராமண நண்பர்களின் பெட்டியை நிரப்புவதற்கே போய்ச் சேருமென்பது அப்புகார். இந்தப் புகாருக்குச் சிறிதும் ஆதாரமில்லையென்று உங்களுக்கு மீண்டும் சொல்கிறேன். கதர் இயக்கத்திலுள்ள பிராமணத் தொண்டர்களாயினும் சரி, வேறு எந்தத் தொண்டர்களாயினும் சரி, நீங்கள் கொடுக்கும் பணத்தை திருடினாலல்லாமல் தங்கள் பெட்டியை நிரப்பிக்கொள்ள முடியாது. இத்தகைய புகாரைச் செய்கிறவர்கள் கதர் இயக்க அமைப்பைப்பற்றியோ, அவ்வியக்கத்தின் தத்துவத்தைப்பற்றியோ ஒன்றுமே தெரியாதவர்களா யிருக்கவேண்டும். தமிழ் நாட்டிலும் சரி, மற்ற விடங்களிலும் சரி, கதர் ஸ்தாபனங்கள் ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்கு வைத்திருக்கின்றன என்று உங்களுக்கு அறிவிக்கிறேன். கணக்குகள் நண்பர்களாலும் பகைவர்களாலும் பரிசோதிக்கப் படத் தயாராயிருக்கின்றன. கதர்த் தொண்டிலுள்ள எவனும் அவன் அசல் திருடனாகவும், போக்கிரியாகவும் இருந்தாலன்றித் தன் பெட்டியை நிரப்பிக்கொள்ளமுடியாது. சர்க்கா சங்கத்தாரிடம் உள்ள பணத்தில் 100க்கு 80 பங்கு அல்லது 75பங்காவது நூற்பவர்களுக்கும் நெசவு காரர்களுக்கும் போகிறதென்று மற்றோரிடத்திற் கூறியிருக்கிறேன். இந்த 75 அல்லது 80 பங்கு பணம் பெறுகிறவர்களில் மிகப்பெரும்பான்மையோர் பிராமணரல்லாதாரே யாவர். அவர்கள் இந்தத் தரித்திரம் பிடித்த நாட்டின் ஏழைகளுக்குள்ளே மிகவும் ஏழ்மையானவர்கள். இந்தியா முழுவதிலுமுள்ள கதர் ஸ்தாபனங்களில் தமிழ்நாட்டு ஸ்தாபனமே மிகச் சிக்கனமாக நடத்தப்படுகிறது என்று நான் சொன்னால் நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். நீங்கள் கொடுக்கும் பணத்தில் 100க்கு 15 வீதத்துக்குக் குறைவாகத்தான் நிர்வாகத்துக்குச் செலவாகிறது என்றால் இன்னும் வியப்புறுவீர்கள். இவ்வாறு 100க்கு 15 பங்கோ, 10 பங்கோ ஆகும் நிர்வாகச் செலவில், யாதொரு பிராமணத் தொண்டரும் சரி, மற்றத்தொண்டரும் சரி, வேறிடங்களில் அவர்கள் பெறக்கூடிய சம்பளத்தைவிட அதிகம் பெறவில்லையென்றும் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

இந்தத் துயரந்தரும் விஷயத்தை நான் வளர்த்திக் கொண்டிருக்கக்கூடாது. லட்சக் கணக்கான வாயில்லா ஏழைமக்களின் நலத்திற்காகவே நடத்தப்படும் இந்தக் கதர் இயக்கமொன்றேனும் நமது கட்சி விவாதங்களினாலும், உட்போர்களினாலும் பாதிக்கப்படாமலிருக்க வேண்டுமென நான் பிரார்த்திக்கிறேன். இந்தியாவில் எல்லா வகுப்புகளையும் ஒன்று சேர்க்கக் கூடியதும், பணக்காரர்களையும் ஏழைகளையும் ஒன்று பிணைக்கக்கூடியதும் கதர் இயக்கம் ஒன்றுதான். கதர்த் தொண்டு யாதொரு மனிதனுக்கோ, யாதொரு ஸ்தாபனத்துக்கோ ஏகபோக உரிமையன்று. சுயநலங் கருதாது தரித்திர நாராயணனுக்கு ஊழியம் செய்வோருக்கே அது தனி உரிமையென்று சொல்லலாம். ஆதலின் வகுப்பு வேற்றுமை, கட்சி வேற்றுமைகளைப் பாராட்டாது இந்தக் கதரியக்கத்தை ஆதரிக்கும்படியும், குறைந்த பட்சமாக உங்கள் அன்னியத் துணியைக்களைந்து கதராடைதலை மேற்கொள்ளும்படியும் வேண்டிக்கொள்கிறேன்.

### பிராமணர் - அல்லாதார் பிரச்னை

இன்று பிற்பகல் சில நண்பர்களுடன் பிராமணர் - அல்லாதார் பிரச்னையைப் பற்றிச் சிறிது நேரம் விவாதிக்க நேர்ந்தது. அஃது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தந்தது. அவ்விவாதத்தின் பயனாக முன்னை விடச் சிறிது நன்றாய் இவ்வியக்கத்தை உணர்ந்திருக்கிறேன். என் கருத்தை அந்நண்பர்களிடம் தாழ்மையுடன் தெரிவித்தேன். அவர்கள் அதை எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளட்டும். ஆனால் விவாதத்தின்போது ஒன்று கவனித்தேன். பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டென்னும் கொள்கையை நான் ஆதரிப்பவனென அவர்கள் கருதுவதாய்த் தெரிந்தது. அப்படி இல்லவேயில்லையென்றும், வருணாசிரமத்தைப் பற்றிய என் கருத்துக்களை இன்னும் ஜாக்கிரதையாக விளக்கிச் சொல்வேனென்றும் அவர்களுக்கு உறுதி கூறினேன்.

உலகில் உயர்வு என்பதேகிடையாது என்பது என் கொள்கை. உயர்வு பிறப்பினாலும் வருவதில்லை; முயற்சியினாலும் அடையப்படுவதில்லை. நான் அத்வைதம் என்னும் மூலாதார தத்துவத்தில் நம்பிக்கையுடையவன். அதன்படி எந்நிலைமையிலும் உயர்வென்பதே கிடையாது. மனிதர்கள் எல்லாரும் சமத்வத்துடன் பிறக்கிறார்கள் என்று நான் பூரணமாய் நம்புகிறேன். இந்தியாவிலோ, இங்கிலாந்திலோ, அமெரிக்காவிலோ, வேறெங்கோ, எந்நிலைமையில் பிறந்தாலும், பிறந்தவர் யாவரும் சமானமானவர்களே. எல்லாருடைய ஆன்மாவும் ஒன்றே. மனிதர்களின் இந்த இயற்கைச் சமத்வத்தில் நான் நம்பிக்கை யுடையவனாயிருப்பதால் தான், நம்மை ஆள்வோரில் டலர் தாங்கள் உயர்ந்தவர்கள் என்னும்போது அக்கொள்கையை எதிர்த்து நான் போராடுகிறேன். தென்னாப்பிரிக்காவில் இந்த உயர்வு தாழ்வுக் கொள்கையை எதிர்த்துத்தான் நான் போராடினேன். அந்நம்பிக்கையினால்தான் நான் என்னைத் தோட்டி யென்றும், நூற்பவன் என்றும், நெசவுகாரன் என்றும், குடியானவன் என்றும், தொழிலாளி என்றும் மகிழ்ச்சியுடன் கூறிக்கொள்கிறேன். பிராமணர்கள் பிறப்பு காரணமாகவோ, முயன்று அடைந்த கல்வி யறிவு காரணமாகவோ உயர்வு பாராட்டும் போதெல்லாம் அவர்களை எதிர்த்துப் போராடி யிருக்கிறேன். சகோதர மனிதனைவிடத் தான் உயர்ந்தவன் என்று ஒருவன் கூறிக்கொண்டால் அது மனிதத்தன்மையாகாது என்று நான் கருதுகிறேன். ஆதலின் பிராமணனாயினும் வேறு எவனாயினும் உயர்வு கொண்டாடும் போது, அவ்வுயர்வுக் கொள்கையென்னும் பூதத்துடன் போரிடும் பிராமணரல்லாதாரின் கட்சியில் நான் முழுமனதுடன் சேர்ந்துகொள்வேன். தன்னை உயர்ந்தவன் என்று சொல்லிக்கொள்பவன் எவனும், அதனாலேயே மனிதன் என்றழைக்கப்படுவதற்குத் தன்உரிமையை இழந்துவிடுகிறானென்பது என் அபிப்பிராயம்.

### வர்ணாசிரமம்

இவ்வாறெல்லாம் நான் நம்புகிறவனாயினும், வருணாசிரமத்திலும் நம்பிக்கை வைத்துளேன் என உங்களுக்கு அறிவிக்கிறேன். வருணாசிரமம் என்னும் நியதியை நீங்களும் நானும் எவ்வளவுதான் மறுத்தாலும் அது ரத்தாகிவிடாதென்பதுஎன்நம்பிக்கை. அதை ஒப்புக்கொண்டு விட்டோமாயின், வாழ்க்கையில் எந்தக் காரியத்துக்காக நாம் பிறந்திருக்கிறோமோ அதைக் கடைப்பிடிக்கப் பிரயத்திலிருந்து விடுதலை பெற்றவர்களாவோம். எல்லாரும் சமத்வத்துடன் பிறக்கிறார்கள் என்று நான் சொன்னபோது, சிற்சில குணாம்சங்கள்கூடப் பிறப்பினால் வருவதில்லை யென நான் குறிப்பிடவில்லை. அதற்கு மாறாக ஒவ்வொருவரும் தம் பெற்றோர்களிடமிருந்து ஒரு வடிவத்தைப் பெறுவது போல் சிற்சில குணாம்சங்களையும் பெறுகிறார்களென நான் நம்புகிறேன். இதை ஒப்புக் கொண்டுவிட்டால், நமது இகலோக ஆசைகளை ஒரு வரையறைக்குட் படுத்திக் கொண்டு பாரமார்த்திகத்துறை ஆராய்ச்சியிலும் சாதனத்திலும் நமது சக்தியைப் பயன்படுத்துதல் சாத்தியமாகும். இந்த வருணாசிரமக் கொள்கையையே நான் எப்போதும் ஒப்புக்கொண்டிருக்கிறேன். வருணாசிரமம் இந்தப்பொருளில் இப்போது அனுஷ்டானத்திலில்லையென்று நீங்கள் சொல்லலாம். அது உண்மையே. இப்போது அனுஷ்டானத்தில் உள்ள வருணாசிரம முறை, உண்மை வருணாசிரமத்தின் மகா கோரமான திரிபே என்று நானே பன்முறை சொல்லியிருக்கிறேன். ஆனால் இந்தத் திரிபு வருணாசிரமத்தை அழிக்கும் முயற்சியில் உண்மை வர்ணாசிரமத்தையே அழித்து விடவேண்டாம். நான் கூறிய இலட்சிய வர்ணாசிரமத்தைநீங்கள் ஒப்புக்கொண்டு விட்டால்!! அதற்கு மேல் நான் உங்களை ஒன்றும் கேட்கவில்லை. தகுந்த இலட்சியங்கள் இல்லாமல் எந்த மனிதனும், எந்த தேசமும் முன்னேற முடியாதென நம்புங்கள்.

மேற்சொன்ன இலட்சிய வர்ணாசிரமத்தை நீங்கள் ஏற்றுக்கொண்டால் அதை அடையும் பொருட்டு என்னுடன் சேர்ந்து இயன்றவரை முயலுங்கள். உலகத்தில் எந்தப்பகுதியிலும் யாரும் இந்த நியதியை எதிர்த்துவெற்றிபெறவில்லை. அதை எதிர்ப்பதால் நம்மை நாம் காயப்படுத்திக் கொள்வதல்லாது வேறு பயன் விளையாது. ஆனால் நமது மூதாதைகள் நமக்களித்த இப்பண்டைச் செல்வத்தைச் சுற்றி வளர்ந்திருக்கும் காட்டை யழிக்க முயன்றீர்களானால் வெற்றி பெறுவீர்கள். எனது யோசனையை நீங்கள் ஏற்றுக்கொண்டால் பிராமணர் - அல்லாதார் பிரச்னையை, அதன் மதசம்பந்தமான அம்சத்தைப் பொறுத்தவரை தீர்த்துவைத்தல் எளிதாகிவிடும். பிராமணனல்லாதானாகிய நான், பிராமணனல்லாதானால் கூடும் அளவுக்கு, பிராமண தர்மத்தைத் தூய்மைப்படுத்த முயல்வேன். ஆனால் அதை அழிக்க முயல மாட்டேன். பிராமணன் உயர்வு பாராட்டும் போதும், பொருள் ஈட்டத்தில் ஈடுபட்டிருக்கும்போதும் அவனைக் கண்டிப்பேன். பிராமணன் பொருளாசை பிடித்தவனானால் உடனே அவன் பிராமணத் தன்மையினின்றும் வீழ்ந்து விடுகிறான். ஆனால் அவனிடம் கல்வியிருந்தால்நான் அதற்குமரியாதைசெய்வேன். தான் கல்விமான் என்பதற்காக அவன் உயர்வு பாராட்டக்கூடாதாயினும் கல்வி எங்கிருப்பினும் மரியாதைக்குரியதேயாதலின் நான் அதைப் போற்றவே வேண்டும்.

வாழ்க்கையின் இத்தகைய தொல்லைகளுக்கெல்லாம் சிறந்ததொரு மருந்திருக்கிறது. நாம் எந்தப்போரில் இறங்கினாலும் தூய்மையுடனும் நேர்மையுடனும் போராட வேண்டும். சத்தியம் அஹிம்சை இவற்றினின்று பிறழக் கூடாது. இவ்விரு தண்டவாளங்களினின்றும் நழுவாமல் நமது வண்டியை ஓட்டினால், நாம் ஆயிரம் தவறுகள் செய்தாலும் தூர் நாற்றம் கிளம்பாமலிருக்கும். போரும் விரைவில் முடிவுறும். இக்கொள்கைகளினின்று நாம் பிறழ்வோமானால் தண்டவாளத்திலிருந்து நழுவும்



ரயிலைப் போல் நாசமுற வேண்டுவதே. சத்திய முள்ள மனிதன் எதிரியின் மீது கூறப்படும் புகார்களை உடனே நம்ப மாட்டான். எதிரியின் கருத்தை அறிந்து கொள்ள முயல்வான். எதிரிக்கு ஊழியம் செய்யவும் சந்தர்ப்பத்தை எதிர் நோக்கியிருப்பான். நான் தென்னாப்பிரிக்காவிலும் இங்கும் ஐரோப்பியருடன் போர் நடத்தியபோது இந்தத் தத்துவத்தையே கடைப்பிடித்து வந்தேன். அப்படியானால் நமது சொந்த சகோதரர்களுடன் நடத்தும் போராட்டத்தில் இதைக் கடைப்பிடித்தல் எவ்வளவு அவசியம் என்று சொல்லவும் வேண்டுமா?"

மகாத்மாவுக்கு அளிக்கப்பட்ட சில சாமான்கள் ஏலம் போடப்பட்ட பின்னர் கூட்டம் கலைந்தது. இன்றிரவே அடிகள் திரிச்சிக்குப் புறப்பட்டுச் சென்றார்.

## 17-9-27

## திரிசிராப்பள்ளி

திரிசிராப்பள்ளியில் மகாத்மா டாக்டர் ராஜன் வீட்டில் தங்கினார். டாக்டர் ராஜன் அடிகளைப் பரிசோதித்ததில் அவர் உடம்பு பெரிதும் களைத்துப் போயிருந்ததாகத் தெரிந்து, பொதுக் கூட்டங்களில் பேசாதிருத்தல் நலமென்றும், எழுதிக் கொடுத்துப் பிறரைக்கொண்டு படிக்கச் செய்யலாமென்றும் யோசனை சொன்னார். காலை 7-30-க்கு அடிகள் நகரசபை மார்க்கெட்டுக்கு அஸ்திவாரக்கல் நாட்டச் சென்றார். அங்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்தனர். பனை ஓலையில் எழுதப்பட்டிருந்த நகரசபை உபசாரபத்திரம், தலைவர் ஸ்ரீமான் பி. ஆர். இரத்தினவேலு தேவரால் படித்துக் கொடுக்கப்பட்டது. மகாத்மா பேச முடியாதிருப்பதற்காக வருந்தந்தெரிவித்தும், அஸ்திவாரக் கல்லை மகிழ்ச்சியுடன் நாட்டுவதாகவும் குறிப்பிட்டு எழுதியிருந்த சிறு பிரசங்கத்தை ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் படித்தார். இத்துடன் இவ்வைபவம் முடிந்தது.

மாலையில் மகாத்மா பொன்மலைக்குச் சென்றார். அங்கு ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் அக்கிராசனர் ஸ்ரீ டி. கிருஷ்ணசாமி பிள்ளையினால் தொழிலாளர் சார்பாக உபசாரபத்திரம் படித்துக் கொடுக்கப்பட்டது. அடிகள் எழுதிவைத்த சிலமொழிகள் ஸ்ரீமான் இராஜ கோபாலாச்சாரியாரால் மொழிபெயர்த்துச் சொல்லப்பட்டன. இத்துடன் தொழிலாளர் சங்கக் கட்டிடத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டிவிட்டு மகாத்மா திரும்பினார்.

அன்று மாலை 6 மணிக்கு லால்குடிக்குப் புறப்பட்டார். வழியிலும் லால் குடியிலும் பற்பல உபசாரபத்திரங்களும் ஏறக்குறைய ரூ 2000 கொண்ட பண முடிப்புகளும் அளிக்கப்பட்டன. அங்கு மெலிந்த குரலில் சில வார்த்தைகளே அடிகளால் கூற முடிந்தது. இரவே திரிச்சிக்குத் திரும்பினார்.

## 18-9-27

இன்று காலை மகாத்மா காந்தி டாக்டர் ராஜன் புதிதாக ஸ்தாபிக்கும் எக்ஸ்ரே வைத்தியசாலையைத் திறந்து வைத்தார். மறுநாள் 19உ திங்கட்கிழமை அடிகளுக்கு மௌனதின மாதலின் அன்று அலுவல் இல்லை.

## 20-9-27

இன்று மாலை நேஷனல் காலேஜ் மைதானத்தில் மாணக்கர் கூட்டம் நடைபெற்றது. மாணக்கரின் சார்பாக மகாத்மாவுக்கு ரூ. 1767 கொண்ட பணமுடிப்பு அளிக்கப்பட்டது. பின்னர் அடிகள் புத்தூரிலுள்ள இந்தியக் கிறிஸ்துவ இளைஞர் சங்கத்துக்குச் சென்று அங்குக்கூடியிருந்த ஏராளமான கிறிஸ்துவர்களுக்கு ஹிதோபதேசம் செய்தார். மாலையில் திரிச்சி வாசிகளின் பெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. விவரங்கள் அடுத்த பாலில் வெளிவரும்.

கூர்ச்சர நாட்டு வெள்ளக் கஷ்ட நிவர்த்தி நிதிக்கு ஐதராபாத் நிசாம் அரசர் ஐம்பதினாயிரம் ரூபா கொடுத்திருக்கிறார்.

o o o

சர்வ தேசச் சங்க புத்தகசாலை யொன்று ஏற்படுத்த ராக் பெல்லர் என்பார் 20 லட்சம் டாலர் நன்கொடையளித்திருக்கிறார்.

o o o

ஸ்ரீசகரிஷி என்ற ஒரு ஜைனமத குரு உபவாசத்தில் பழகிப் பழகி அண்மையில் தொடர்ச்சியாக167நாள்உபவாச மிருந்தாராம்.

o o o

அலகா பாத்திலுள்ள பண்டித நேருவின் "ஆனந்தபவன்" மாளிகையைப் பெண்கள் கலாசாலைக்கு வாங்குவதற்கு அலகாபாத் சர்வ கலாசாலையார் உத்தேசித்திருக்கிறார்களாம்.

o o o

அமெரிக்காவில் போர்டு கம்பெனியுடன் போட்டி போட்டுவரும் ஜெனரல் மோட்டார் கம்பெனியார் பத்துபவுன் செலவில் மோட்டார் வண்டி செய்யப்போவதாய் அறிவித்திருக்கிறார்கள்.

## கலம்பகம்

காண்டன் நகரில் மீண்டும் பிரிட்டிஷாரைப் பகிஷ்கரிக்க முயற்சி தொடங்கப்படுமென்று தெரிந்த பிரிட்டிஷ் அதிகாரிகள் முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகள் செய்திருக்கிறார்களாம்.

o o o

பம்பாயில் சிறிது காலமாக இந்தியத்தொழிலாளர் நிலையைக் குறித்து ஆராய்ச்சி நடத்திக்கொண்டிருந்த மிஸ்டர் ஸ்பிராட் என்னும் பிரிட்டிஷார் 124 ஏ பிரிவின்கீழ் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

o o o

செப்டம்பர்மீ 17, 18உகளில் மதுரை நகரில் கூடிய சென்னை மாகாண 3-வது யாதவர் மகாநாடு ராவ்சாகிப் எம். வேணுகோபால் பிள்ளையவர்களின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது என்று அறிவிக்கப்படுகிறது.

o o o

மகாத்மா புதுக்கோட்டை சமஸ்தானம் போகு தெருக்களிலும் வீடுகளிலும் தோரணங்கள் முதலியன கட்டி அலங்கரிப்பதற்குப் புதுக்கோட்டை நகரசபைத் தலைவர் அநுமதியளிக்க மறுத்துவிட்டார் எனத் தெரியவருகிறது.

o o o

சேலத்தில் ஜில்லாபோர்டுதலைவர் ராவ்பகதூர் எல்லப்ப செட்டியார், நகரசபைத் தலைவர் ஸ்ரீமான் தம்மண்ண செட்டியார் முதலியோர் உள்ளிட்ட 300 பிராமணரல்லாதார் காங்கிரஸில் சேர்ந்திருக்கின்றனராம்.

o o o

மதுரையிலுள்ள சில ஹோட்டல்களில் "சூத்திரர்" என்று எழுதப்பட்டிருக்கும் பலகைகளை எடுக்கவேண்டி, சில பிராமணரல்லாத தொண்டர்கள் சரஸ்வதி பூஜையன்று முதல் சத்தியாக்கிரகம் செய்யப் போகிறார்களாம்.

o o o

கொழும்பு ஆதிதிராவிட வைதிக சமாஜத்தின் 6-வது வருட 9-வதுபொதுக்கூட்டம் செப்டம்பர்மீ 10உ யன்று உபநயகர் கே. பி. பரமசிவன் அவர்களின் தலைமையில் நன்கு நிறைவேறியதாக அறிவிக்கப்படுகிறது.

o o o

இந்திய சட்டசபையில் காங்கிரஸ் கட்சியின் காரியதரிசியாயிருந்த ஸ்ரீமான் எ. அரங்கசாமி ஐயங்காரின் ராஜினாமா அங்கீகரிக்கப்பட்டது. வேறு காரியதரிசி தேர்ந்தெடுத்தல் அடுத்த தில்லிகூட்டம் வரை தள்ளிவைக்கப்பட்டிருக்கிறது.

o o o

எழுவனம் பட்டியில் ஒத்துழையாமைக் காலத்திலிருந்து தேசத்தொண்டும் கதர்த் தொண்டும் செய்துவந்த இளைஞர் ஸ்ரீ மல்லி செட்டியார் காலஞ்சென்றார். அவர் ஆன்மா சாந்தியடைவதாக என்று அவ்வூர்க் காங்கிரஸ் காரியதரிசி எழுதுகிறார்.

o o o

சிதம்பரம் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் திருவவதார திருநக்ஷத்திரம் நாளது பிரபவஹு புரட்டாசி 12உ முதல் 13உ வரை கூடலூர் சாரங்கு வீதியிலுள்ள ஸ்ரீ இராமலிங்க பக்தஜன சபையில் கொண்டாடப்பெறும் என அறிவிக்கப்படுகிறது.

o o o

நாகப்பட்டணம் தருமபூஷண புத்தகசாலையின் முதலாவது ஆண்டு நிறைவு விழா நிகழும் பிரபவஹு புரட்டாசிமீ 1, 2உயில் ஸ்ரீமான் கே. எஸ். இராமசாமி சாஸ்திரிகள் பி. ஏ., பி. எல் தலைமையில் இனிது நடைபெற்றதென்று அறிவிக்கப்படுகிறது.

o o o

பெஜவாடாவில் சில நாட்களுக்கு முன் வீரய்யா, தாவல் ராஜு என்பவர்களுக்குச் சொந்தமான கிணற்றில் மண்ணெடுத்தபோது அதில் தங்கத் தூள்களிருந்தனவாம். அக்கிணற்றை அரசாங்கத்தார் விரைவில் சுரங்கக் கம்பெனியாருக்குக் குத்தகை விடுவராம்.

o o o

மகாத்மா தென்னாட்டில் வசதியாகச் சுற்றுப் பிரயாணஞ் செய்யத் தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் அவருக்கென ஒரு தனி வண்டி கொடுத்திருக்கின்றனர். அதில் எத்தனைபேர் பிரயாணஞ் செய்கின்றனரோ அத்தனை பேருக்கு மட்டுமே கட்டணம் வாங்கப் படுமாம்.

o o o

பெங்களூர் நகரசபைக் கமிஷனர் சபையின் அநுமதியின்றி ஸ்பெஷல் என்ஜினியருக்கு ராஜா அளித்ததைக் கண்டிக்கக் கொண்டுவந்த தீர்மானத்தை சபைத்தலைவர் நிராகரித்தமையால் 14 அங்கத்தவர் சபையினின்றும் வெளியேறித் தங்கள் பதவிகளை ராஜீநாமா செய்து விட்டனர்.

o o o

பற்களின் சீர்கேடே பைத்தியத்திற்குக் காரணமென்று மேல் நாட்டு வைத்தியர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். பற்களின் சீர்கேடு மூளையைத் தாக்குவதால் பைத்தியம் தோன்றுகிறதாம். இங்கிலாந்திலுள்ள வைத்திய சாலையில் உள்ளவர்களில் பலர் பற்களின் சீர் கேடு காரணமாய்ப் பித்தரானவராம்.

காசிக்கண்மையிலுள்ள ஒரு கிராமத்தில் சில 'சாது'க்கள் 16 வயதுப் பெண்ணொருத்தியைப் பலவந்தமாகக் கற்பழித்து அவளைப் பிரக்ஞையற்றநிலையில் விட்டுச் சென்றனராம். அவள் சில மணி நேரத்தில் உயிர் துறந்தாளாம். ஒரு சாது சந்தேகத்தின்மேல் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

o o o

இலிசுரா டன்கன் என்பாள் ரெயின் பிரதேசத்தில் சிறந்த நடனமாதாம். அவள் எப்போதும் நீண்ட அங்கவஸ்திரத்தைக்கழுத்தில் போட்டுப் பறக்கவிட்டு உல்லாசமாகச்செல்வாளாம். அப்படி ஒருநாள்மோட்டாரில் செல்கையில் அணி மோட்டார் சக்கரத்தில் சிக்கிக் கொள்ள அவள்கழுத்து முறிந்து இறந்தாளாம்.

o o o

மான்செஸ்டரைச்சேர்ந்த விட்னிவில்ஸன் என்னும் பெயர்பெற்ற இரணவைத்தியர் தாமே நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் நிலையில் உயிரற்ற பிணமாயிருந்தாராம். தமக்குத் தாமே மயக்க மருந்து கொடுத்துப் பரிசோதனை நடத்திக்கொண்டிருக்கையில் அவர் உயிர் விட்டிருக்க வேண்டுமென்று யூகிக்கப்படுகிறது.

o o o

நீலன் சிலையை அப்புறப்படுத்தவதன் பொருட்டுத் தோழர் சிங்காரவேலு செட்டியார் சென்னை நகரசபைக்கு மறுமுறை கொண்டுவந்த தீர்மானத்தையும் சபைத்தலைவர் சில நகரசபைக்குச் சொந்தமான தல்ல வென்றும் அஃது இருக்கும் இடமும் சபைக்குச் சொந்தமானதல்ல வென்றுங்கூறி நிராகரித்துவிட்டார்.

o o o

சாதலின் தாமஸ் என்ற இருபது வயதுள்ள வேல்ஸ் நாட்டுப் பெண் 12 மைல் நீளமுள்ள பிரிஸ்டல் கால்வாயைக் காலை நாலு மணிக்கு நீந்தத் தொடங்கி 11-30 மணிக்கு முடித்து விட்டாளாம் கால்வாய் மிகவும் இழுப்புள்ளதாதலின் இது பெரிய வெற்றியாகும். இதற்கு முன் எத்தனையோ பேர் முயன்று முடியாது விட்டு விட்டனர்.

o o o

ஞானதிருஷ்டி முதலிய விஷயங்களையும், மரணத்திற்குப் பின் மக்கள் உயிர் வாழ்கின்றார்கள் என்ற விஷயத்தையும், இறந்தவர்கள் இந்த உலகத்திலுள்ளவர்களுக்குச் செய்தி அனுப்புதல் கூடும் என்ற விஷயத்தையும் அங்கீகரிக்க வேண்டுமென்று டாக்டர் மிச்சல் என்பவர் லண்டனிலுள்ள விஞ்ஞான சங்கத்தில் செய்த உபந்நியாசத்தில் கூறியிருக்கிறார்.

o o o

அமராவதிபுதூர், காந்திநகரில் நாளிது புரட்டாதி மாதம் ஏழாந்தேதி வெள்ளிக்கிழமையன்று காந்தியடிகள் பிறந்த திருநாள் கொண்டாடப்பெறும். பகல் ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளிக்கப்பெறும். மாலை ஐந்து மணிக்கு திரு சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும். அக்கூட்டத்தில் காந்தியடிகள் பிரசன்னமாயிருப்பார்கள் என்று அறிவிக்கப் படுகிறது.

o o o

வெல்லவாயகப் பகுதியில் ஒருவன் தன் மனைவி மீது ஐயுற்று அடிக்கடி அச்சுறுத்தி வந்தான். சென்ற 3-ந் தேதி அவன் மிக்க சினமுண்டு அவளைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்று தான் குடியிருந்த வீட்டையும் தீக்கொளுவி எரித்தானாம். தன்னைத் தற்கொலை புரிந்துகொள்ள ஒரு மரத்தில் தூக்கிட்டானாம். மரக்கிளை முறிந்து விழவே அவன் காயத்தோடு உயிர் பிழைத்துப் போலீஸ் காவலிலிருக்கிறான்.

o o o

காசியில் பல சிறுவர்கள் கண்ணாம்பூச்சி ஆட்டம் ஆடினார்களாம். அதில் 7 வயதுப் பையனொருவன் திறந்திருந்த ஒரு பெட்டிக்குள் உட்கார்ந்து மறைந்தபோது பெட்டி மூடிக்கொண்டதாம். பெற்றோர்கள் 3 மணி நேரங் கழித்துத் தேடியபோது உடன் விளையாடிய சிறுவனின் தங்கை அவன் பெட்டிக்குள்ளிருப்பதாகத் தெரிவித்தாளாம். பெட்டியைத் திறந்துபார்க்கப் பையன் மூச்சுத் திணறி இறந்திருந்தானாம்.

o o o

சிலர்வ்பாங்கி மசோதாவை இந்திய மந்திரி அநுமதியாததின் காரணமாய் ஸர் பேசில் பிளாக்கெட் ராஜினாமா செய்துவிட்டார் என்று வதந்தி சென்றபாலில் குறிப்பிடப்பட்டது. அவர் ராஜினாமாவை இராஜப்பிரதிநிதி அங்கீகரிக்கவில்லையென்றும், ஸர் பேசில் பிளாக்கெட்டும் வற்புறுத்தவில்லையென்றும், அம்மசோதாவை யோசிக்க இந்திய சட்டசபையின் விசேஷக் கூட்டம் ஒன்று நடைபெறலாமென்றும் சொல்லப்படுகின்றன.

o o o

லீவிஸ் எனும் ஓர் அமெரிக்க மாது பாரிஸ் போந்து அங்கிருந்த ஒரு ஹோட்டலில் தங்கினாளாம். மறுநாள் சில நண்பர்களை ரயிலேற்றச் சென்று திரும்பிவந்தபோது அவளிருந்த ஹோட்டல் மாயமாய் மறைந்துவிட்டதாம். அதில்வைத்திருந்த தமது பணம் அணிமணிகளைப் பெற எவ்வித வழியுமின்றி எவரைக் கேட்டாலும் ஓட்டலைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லையாம் போலீசாராலும் இதைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியாமற் போயிற்றாம்.

o o o

துவேஷங் காரணமாக பேச்சிலோ எழுத்திலோ வேண்டுமென்று மதநிந்தனை செய்கிறவர்களுக்கும், ஒரு வகுப்பாரின் உணர்ச்சியைப் புண்படுத்துகிறவர்களுக்கும் இரண்டு வருஷம் வரை சிறைத்தண்டனை யளிக்கலாம் என்பதாக 295-ஏ பிரிவு ஒன்றைப் புதிதாக பினல் கோடில் சேர்க்கும் மசோதா இந்திய சட்டசபையில் நிறைவேறியது. "ரங்கீலா ரசூல்" தீர்ப்பின்மீது எழுந்த கிளர்ச்சியின் பயனாக இம்மசோதா அரசாங்கத்தாரால் கொண்டுவரப் பட்டது.

o o o

பம்பாயில் படித்த பணக்காரரான வி. குமாரசாமி என்பார் தம்மை, சென்னையிற் காலஞ்சென்ற டாக்டர் சுப்பிரமணிய ஐயரின் மகன் என்றும் ஜனாப் ஜின்னாவின் ஜூனியர் என்றும்கூறிக்கொண்டு ஒருவருக்கு 5 லட்சம் ரூபா கடன்கொடுப்பதாகஅவரிடம் 450 ரூபா ரயில் செலவுக்கெனப் பெற்றுக்கொண்டு மறைந்ததற்காக இலட்சுமண புரியில் கைது செய்யப்பட்டுள்ளார். இவர் கல்கத்தாவில் காசிம் பசார் ராஜாவையும் வேறு சிலரையும் மோசம் செய்திருப்பதாகக் கூறப்படுகிறது.

o o o

நாளிது ஆவணித்திங்கள் 15-ம் நாள் புதன் கிழமை தென்காசி ந. ஆறுமுகம்பிள்ளையவர்கள் தம்பி ந. சுப்பிரமணியபிள்ளைக்கும், தென்காசி செ. செண்பகம் பிள்ளையவர்களின் மகள் ஆறுமுகத் தம்மாளுக்கும் திருமணம் மிகவும் செவ்விதாய் நடந்தேறிற்று. ஒரு தமிழாசிரியர் கையால் பொற்றாலி வழங்கப் பட்டுப் பெரியோர்களின் கல்வாழ்த்துக்களினிடையே மணமகனும் மணமகளும் கதராடையணிந்து பூமாலையிட்டு மணமுடித்துக் கொண்டார்கள் என்று அறிவிக்கப்படுகிறது.

o o o

இங்கிலாந்தில் சமீபத்தில் ஒரு பெண்ணுக்கு ரண சிகிச்சை செய்த பொழுது அவள் உடம்பில் ஒரு மோதிரம்அகப்பட்டது. அது பத்து வருஷங்களுக்கு முன் அவளுக்கு ரண சிகிச்சை செய்த ஒரு வைத்தியருடையதென்று தெரிய வந்ததாம். ஒரு குழந்தை ஓர் அரைப் பென்ஸ் நாணயத்தை விழுங்கி விட்டதாம். இரண்டு முறை ரண சிகிச்சை செய்தும் பயனில்லை. சில வருஷங்கள் கழித்து அக்குழந்தை இருமிய பொழுது தானாகவே நாணயம் வெளியே வந்துவிட்டதாம்.

o o o

அருப்புக்கோட்டையில் மகாத்மா காந்தி விஜயம் செய்வதற்குப் பல அன்பர்களால் சுமார் 500 ரூபா அளிப்பதாக ஏற்பாடுசெய்யப்பட்டிருக்கிறது. கதரின் அவசியத்தையும், மகாத்மா காந்தி வருகையையும் பற்றிப் பல அன்பர்கள் உபந்நியாசமும் செய்து வருகிறார்கள் எல்லோரும் கதர்நிதிக்கு உதவிசெய்து நாட்டின் ஏழைக் குடிகளின் க்ஷேமத்தையும் கைத்தொழில்களையும் நெசவுத் தொழில்களையும் விருத்தி செய்யும்படி கேட்டுக் கொள்கிறோம் என திரு வீர. சு. பு. வீரப்பசெட்டி எழுதுகிறார்.

o o o

சேலம், கோவை, திரிச்சி, நெல்லூர் முதலிய இடங்களிலிருந்து டிரினிடாத் நாட்டுக்குக் கூலி வேலை செய்து ஆங்கு ஏராளமாகப் பொருள் தேடலாமென்ற எண்ணத்தோடு சென்றவர்களில் 160 பேர்அங்குப்படாத பாடுபட்டுமிக்கசிரமத்தோடு சென்றவாரம் என்பு தோல்போர்த்த உருவோடு சென்னை நண்ணினர். அவர்களைப் பத்திரிகைப் பிரதிநிதிகண்டு விசாரித்ததில் பின்வரும் விவரங்கள் தெரிய வந்தன:—அந்நாட்டில் அவர்கள் கொக்கோ, தென்னை, தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்து வந்தார்களாம். வேறு தொழில் செய்து பிழைக்க விடப்படுவதில்லையாம். வியாபாரம் முதலியன செய்தால் அவைகளைத் தடுத்துத் தோட்ட வேலைகளுக்கே மீண்டும் போம்படி கட்டாயப் படுத்தப் படுவார்களாம். வேலை கிடையாது பொதுச் சாலையிலோ புறந்திண்ணையிலோ உறங்கினால் அவர்கள் தண்டிக்கப்படுவார்களாம். இந்தியர்களை அடித்து உதைத்துத் துன்புறுத்தல் அங்கே சாதாரணமாம். துன்பந்தாங்கமாட்டாது சிலர் தற்கொலையும் புரிந்து கொண்டார்களாம். இதனோடு ஒருவித விஷப் பூச்சி கடித்து குட்ட நோய் உண்டாக்குமாம். இப்படிப் பட்டவர்களுக்கு வைத்திய உதவியும் கிடையாதாம். இதனால் பலர் இறந்தனராம். இத்தகைய தொந்திரவுகளிலும் அந்நாட்டிலுள்ள ஹிந்துக்கள் தங்கள் சொந்தச் செலவில் இந்துக் கோயில்கள் சில கட்டியிருக்கிறார்களாம். மதாசாரப்படியே மணம் நடத்துகிறார்களாம். அவர்களுக்கு வங்காளப் பிராமணர் புரோகிதஞ் செய்கின்றனராம். அவர்களில் 100க்கு 80 பேர் இந்தியா திரும்ப வசதி செய்து கொடுக்கப்பட்டால் திரும்பி விடுவார்களென்று இப்போது திரும்பிவந்தவர்கள் கூறுகிறார்கள்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு

நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1927 ௵ செப்டம்பர்மீ 21உ.

## கன்னி மேயோ

சென்ற வாரம் கன்னிமேயோ எழுதிய நூலை முன்னிலைப்படுத்தி "பொய்ம்மை வெளியீடு" என்னுந் தலைப்பிட்டு இந்தியாவின் பழைய நிலையைப்பற்றியும், தற்கால வறிய நிலையைப்பற்றியும், அவ்வறிய நிலைக்கு இந்தியாவில் நடைபெறும் அதிகாரவர்க்க ஆட்சிமுறையே காரணம் என்பதுபற்றியும் எழுதினோம்.

-கன்னி மேயோவின் நூலைப்பற்றி நமது நாட்டறிஞர் பலர் தத்தங் கருத்தை வெளியிட்டு வருகிறார். இவ்வாரம் மகாத்மாகாந்தியின் கருத்தும் வெளிவந்திருக்கிறது. அச்சிரிய கருத்து மற்றோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. அதை நேயர்கள் ஊன்றிப் படிப்பார்களாக.

கன்னி மேயோ இந்தியாவின் சாக்கடைகளைக் கண்டு ஆராய்ந்து, அவைகளைப்பற்றியே நூல் எழுதினர் என்று மகாத்மா குறிப்பிட்டது போற்றத்தக்கது. அச்சாக்கடையே பாரத நிலையம் என்று அவ்வம்மையார் கருதியது தவறு என்று அடிகள் அருளியதுங் கருதத்பாற்று. மகாத்மா வரைந்துள்ள அக்கட்டுரையின் பிற்பகுதியை நாட்டார் கருத்துக் கூர்ந்து கவனித்து நடப்பாராக.

கன்னி மேயோ, இந்தியாவின் குப்பையைக் கிளறி விட்டமையான், எங்கணுந் தி நாற்றம் வீசுகிறது. அவ்வம்மையார் நூலை முன்னிலைப்படுத்திப் பாரதத்தாயின் கலைகளைப் போற்றி அவைகளை உயர்ப்பிக்க வேண்டுவது நம்மனோர் கடமை.

கன்னிமேயோ நமது நாட்டுக்கல்வியைப்பற்றி எள்ளி நகையாடுகிறார்; நாட்டின் கல்விக் குறைபாட்டைப்பற்றியும் இழித்துக்கூறுகிறார். தற்போதைய இந்தியாவையும், இவ் விந்தியாவின் கல்வி நிலையையுங் கண்டு இழிந்த கருத்தை அவ்வம்மையார் கொண்டார் போலும்!

தற்காலக் கல்வி நிலையைப் பற்றி அம்மையார் இந்தியரைக் குறை கூறுவது அறியாமை. அம்மையார் தாம் புகழ்ந்து கூறும் பிரிட்டிஷ் ஆட்சிமுறையையே குறை கூறியிருத்தல் வேண்டும். இந்தியா பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டு இத்துணை ஆண்டுகளாகியும் பிரிட்டிஷ் இந்தியா எத்துணைக் கலைஞானிகளை ஈன்றது என்பதைக் கன்னி மேயோ கருதியதுண்டா? அவ்வாராய்ச்சியைக் கன்னி செய்யாதொழிந்தமைக்குக் காரணமென்னை? இந்தியர் கல்வி யறிவின்றிப் பாழுங் குழியில் விழுந்து கிடந்ததாகவும், இப்பொழுது அந்நிய ஆட்சி முறையால் அக்குழியினின்றும் ஏறி வருவதாகவும் கன்னிமேயோ நினைப்பது வீண் கனவே பாகும். கன்னிமேயோவின் முன்னோர்கள் கல்வியறிவு இத்தன்மையதென் றுணராது வனசரர்களாயுலாவியபோது, இந்தியாவில் அருங்கலைகள் தோன்றியதை அவர் இனியாதல் சரித்திரங்களைப் படித்துத்தெரிந்துகொள்வாராக.

இந்தியாவில் அந்நிய ஆட்சி முறை தொடங்கிய நாள் முதலே இந்திய நாட்டுக்கல்வி அருகிவிட்டது என்பது எமது கொள்கை. "இஃதென்னை? முழுப்பொய். இப்பொழுது எத்துணைக் கல்வி நிலையங்களிருக்கின்றன? எத்துணைப்பல்கலைக் கழகங்களிருக்கின்றன? எத்துணை ஆயிரம் ஆயிரம் பிள்ளைகள் ஒவ்வோ ராண்டிலும் உயர் பட்டம் பெறுகிறார்கள்? பெண்களில் எத்துணைப்பேர் கல்வி பயில்கிறார்கள்?" என்று சிலர் மலைவுறலாம்.

"கல்வி" என்னும் பெயரால் அக்கல்வியாளர் தொகையைக் கண்டு கல்வி வெள்ளம் பெருக்கெடுத் தோடுகிறது என்று எண்ணுவது, யானையுண்ட விளாங்கனியைக் கனிந்த விளாங்கனியென்று எண்ணுவதையொக்கும்.

இப்பொழுது கற்றவர் என்று சொல்லப்படுவோர் தொகையில் பெருகியிருக்கலாம். ஆனால் அவர்கள் கற்றது கல்வியா என்பது சிந்திக்கற்பாலது. இக்கல்வியாளர் அதிகாரவர்க்க ஆட்சிமுறையைத் தாங்கக் கனிதர்களாகிறார்கள்; பெரிய உத்தியோகஸ்தர்களாகிறார்கள்; அதிகாரிகளாகிறார்கள். இவர்கள் கல்வி பெரிதுந் தேசத்துரோகத்துக்குப் பயன்படுவதாகிறது.

"அடிமை புணர்ச்சி யூட்டுவது கல்வியா" என்று கன்னி மேயோவைக் கேட்கிறோம். பண்டை நாளில் நாட்டில் கற்றவர்கள் வயிற்றுப் பிழைப்புக்கென்று கல்விபயின்றாரில்லை. அறிவுவளர்ச்சிக்கென்று அவர்கள் கல்வி கற்று வந்தார்கள். அவ்வறிஞர்கள் கல்வியறிவினின்றும் பிறந்த குழவிகளே நமது நாட்டு நூல்கள்.

உபநிடதங்கள்; சோதிடங்கள்; வயித்தியங்கள்; காவியங்கள் முதலியன எக்கல்வியினின்றும் பிறந்தன? கன்னி மேயோ வியந்து போற்றும் தற்காலக் கல்வி பயின்றோரிடமிருந்து எக்கலைகள் அரும்பின? அடிமைபுணர்ச்சியும் தேசத்துரோகமும் தற்காலக் கல்வியறிவின் பயன் என்று கூறல் மிகையாகாது.

தற்காலக் கல்வியினின்றும் கலைகள் பிறவாவிடினும், ஒழுக்கமாதல் பிறக்கிறதா? கன்னிமேயோ கண்ணுக்குப் புலனாய ஒழுக்கமே தற்காலக் கல்வியின் பயன் என்று சுருங்கச் சொல்லலாம். இந்தியாவில் ஏதாயினுந் தீயொழுக்கங் காணப்படுமேல் அதற்குக் காரணம் மேல்நாட்டுக் கூட்டுறவும் மேல்நாட்டுக் கல்வி முறையுமாகுமென்று கன்னி மேயோவுக்கு அறிவுறுத்துகிறோம்.

பண்டைப் பெரும்புலவர்கள் கல்வி பயின்று இயற்கையையும், அதன் உள்ளுறையாயுள்ள இறைவனையும் ஆராய்வதில் கருத்தைச் செலுத்தி வந்தார்கள். அவ்விரண்டையும் ஆராய்ந்து அவர்கள் எழுதிய காவியங்களின் பெற்றியையும் ஞான நூல்திறத்தையும் ஈண்டு விரிக்கிற் பெருகும். இவ்வுலகில் கல்வியின் முடிந்த பயன் என்னவெனில், வாழ்வில் அமைதியும் மகிழ்ச்சியும் பெற்று இன்புறுவதாகும். இப்பொழுது அமைதியாதல், மகிழ்ச்சியாதல், இன்பமாதல் வாழ்வில் உண்டா என்னும் வினவிற்கு என்ன விடை பிறப்பது? எங்கணும் அமைதியின்மை! எங்கணுங் கொந்தளிப்பு! எங்கணுங் கிளர்ச்சி. மக்கள் மாக்களாக மாறி வருகிறார்கள் என்று சுருங்கச் சொல்லலாம். இவ்வாழ்வை யளிப்பது எங்ஙனங் கல்வியாகும்?

பண்டைக் கல்வியை நினைக்க நினைக்க உள்ளம் இன்பக் கடலாடுகிறது. அக்கல்வியாளரை ஈன்ற பாரதத் தாய் கன்னி மேயோவால் எள்ளப்படுகிறாள்! காலமே! காலமே!

"புவியினுக் கணியா யான்ற
பொருடந்து புலத்திற்றாகி
யவியகத் துறைகடாங்கி
யைந்திணை நெறியளாவிச்
சவிடறத் தெளிந்து தண்ணென்
றொழுக்கமுந் தழுவிச்சான்றோர்
கவியெனத் தெளிந்தகோதா
வரியினை வீரர்கண்டார்"

இப்பாட்டு எத்தைக் கல்வியினின்றும், எத்தகை யுளத்தினின்றும் பொங்கியோடி யிருக்குமென்று சொல்ல வேண்டுவதில்லை.

இது பாட்டா? கோதாவரியா? நேயர்களே! நோக்குங்கள்! இத்தகைப் பாக்கள் பல்லாயிரங் கொண்ட காவியங்கள் நமது பாரதத் தாய்க்கு அணிகலன்களாக ஒளி செய்கின்றன. அவ்வொளிகாணுங் கண் கன்னிமேயோவிற்கு இல்லைபோலும்!

ஈண்டு மற்றொன்று சிறப்பாகக் குறிப்பிட விரும்புகிறோம். அஃது இசைக்கல்வி. ஒரு நாட்டின் நாகரிகத்தை அறிதற்குப் பலதிறக்கருவிகளுண்டு. அவைகளுள் தலையாயதுஇசை.பாரதநாட்டின் இசைஇன்னும் அழிந்துபடவில்லை. அவ்விசைக்குஒப்பாகவாதல்உயர்வாகவாதல் உலகில் மற்றுமோர் இசையுண்டோ? இசையின் நிலை கண்டவர்கள் பாரதமக்கள் என்று உணராது பாரதமக்களை அநாகரிகர்கள் என்று ஓர் அமெரிக்கக் கன்னி யுரைக்குங் காலத்தையும் இக்காலப் பாரதப் பிள்ளைகளாகிய நாம் பார்த்துவருகிறோம்.

கன்னிமேயோவை நோக்கி யொன்று கூற விரும்புகிறோம். கன்னியே! நீவிர் கண்ட இந்தியாவின் சாக்கடை எங்களுடையதன்று. அஃது உமது மேல்நாட்டினின்றும் போந்தது. இதை யோர்க.

## நீலனுக்குக் காலன்

நீலன் எவன்? ஒருபோது நமது நாட்டு மக்களை விலங்குபோல வேட்டையாடினவன்; நம்மவர்களை வன்கண்கொண்டு தூக்கிலிட்டவன்; பெண்களையும் குழந்தைகளையும் இரக்கமின்றிச் சுட்டுக்கொன்றவன். இக்கொடியனுக்குச் சென்னை மவுண்ட்ரோட்டில் ஓர் உருவச்சிலை நிறுத்தப்பட்டிருக்கிறது.

நீலன் கொடுமைகளை யுணர்ந்த இளைஞர் சிலர் அவன் சிலையைத் தகர்க்க ஓர் இயக்கங்கண்டனர். அவ்வியக்கத்தையே ஈண்டு நீலனுக்குக் காலன் என்று குறிப்பிடுகிறோம்.

இளைஞர்கள் அவ்வியக்கந் தொடங்கிய பின்னரே நீலன்அரக்கச்செயல் பலபலர்க்குத் தெரியலாயின. இளைஞர்கள் கண்ட அவ்வியக்கம் மகாத்மாகாந்தியையும், நாட்டையுங் கவர்ந்து நிற்கிறது.

அவ்வியக்கத்தில் தலைப்பட்ட இளைஞர் சிலர் சிறைக்கோட்டம் நண்ணியிருக்கிறார். தலைமை வகித்து இயக்கத்தை நடாத்திய ஸ்ரீமான் சாமிநாத முதலியாருஞ் சிறைபுகுந்தார். இளைஞர்கள்ஊக்கங்குறையாமல் முனைந்து நிற்கிறார்கள்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை கடற்கரையில் சென்னைக் காங்கரஸ் சார்பாக ஒரு கூட்டங் கூட்டப்பட்டது. நீலன்சிலை எடுக்கப்பட வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதிகாரவர்க்கம் இத்தகைய தீர்மானங்கள் எத்துணையோ உண்டு ஏப்பமிட்டிருக்கிறது. தீர்மானங்களால் பயன் விளையவில்லை என்னும் உண்மை கண்ட பின்னரே சத்தியாக்கிரக இயக்கம் ஆங்காங்கே துவங்கப்படுகிறது.

இப்பொழுது இயக்கத்துக்குத் தலைமை வகித்துள்ள சுவாமி நித்தியானந்தர் இயக்கம் நிறுத்தப்பட மாட்டாதென்றும், காங்கரஸுடன் பிணங்கி இளைஞர்கள் நடக்க மாட்டார்களென்றும் கூட்டத்தில் நன்றி கூறியபோது பேசியதாகத் தெரிகிறது.

இளைஞர்கள் தாங்கள் விரும்பியவாறு இயக்கத்தை நடாத்த முற்படுவரேல் அவர்கட்கு மற்றவர்கள் இடையூறு செய்யாமல் தங்கள் தங்களாலியன்ற உதவி செய்வார்களாக. ஒன்றுஞ் செய்ய இயலாதவர்கள் நெஞ்சிலாதல் அநுதாபங் கொள்வார்களாக. ஆண்டவன் திருவருள் தொண்டர்கள்பால் நிலைபெற்று நிற்பதாக.

## பொன்மலைத் தொழிலாளர்

தென்னிந்திய ரெயில்வே தொழிற்சாலை பொன்மலையில் புதிதாக நிறுவப்பட்டது நேயர்கட்குத் தெரியும். தென்னிந்திய ரெயில்வே தொழிற்சாலைகள் நாகை, போத்தனூர் முதலிய சில விடங்களில் இருந்து வருகின்றன. இத்தொழிற்சாலைகளை ஒரே இடத்தில் அமைக்க வேண்டுமென்னும் நோக்குடன் திருச்சி பொன்மலையில் ஒரு பெருஞ்சாலை நிறுவப்பட்டது. அதன்கண் இப்பொழுது வேலை துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. பொன்மலையில் தொழிலாளர்களைத் திரட்டிய நோக்கம்இப்பொழுதுபுலனாகிவிட்டது.

தென்னிந்திய ரெயில்வே ஏஜண்ட் ஓர் அறிக்கை பிறப்பித்துள்ளார். அவ்வறிக்கையின்படி ஏறக்குறைய மூவாயிரந் தொழிலாளர் வேலையிழப்பர் என்று தெரிகிறது. கரக்பூர் தொழிற்சாலையில் இரண்டாயிரம் பேர் நீக்கப்பட்டனர். திடீரென ஆயிரக் கணக்கான தொழிலாளர் வேலையினின்றும் நீக்கப்படுவதால் எத்துணை ஆயிரம் உயிர்கட்குத் துயர்விளைகின்றதென்பது சிந்திக்கப்படல் வேண்டும்.

கரக்பூர் தொழிலாளர் சார்பாக இந்திய சட்டசபையில் பிறந்த வினாக்களுக்கு அரசாங்கச்சார்பாக இறுத்தவிடை உண்மையை உணர்த்திவிட்டது. கரக்பூரில் செய்யப்பட்டு வந்த சில சாமான்கள் இனி இங்கிலாந்தில் செய்யப்படுவதால், கரக்பூர் தொழிற்சாலையில் ஆள் குறைக்க நேர்ந்தது என்று சொல்லப்பட்டதை நேயர்கள் ஊன்றிக் கவனித்தல் வேண்டும். பிரிட்டிஷ் தொழிலாளர் பொருட்டு இந்தியத் தொழிலாளர் வருந்த வேண்டும்போலும்!

தென்னிந்திய ரெயில்வே ஏஜண்ட் திடீரென இவ்வறிக்கை பிறப்பித்ததற்கு அடிப்படையான காரணமொன்றிருத்தல் வேண்டும். தென்னிந்திய ரெயில்வே தொழிலாளர்க்குள் ஒற்றுமை யிருந்தால் நலம் பெறலாம். வேண்டற்பாலது ஒற்றுமையே. இது குறித்து நாடு முழுவதுங் கிளர்ச்சி செய்தல் வேண்டும். இம்மாகாணத்துள்ள எல்லாவித தொழிலாளர் கருத்தும் இதன்மீது பதிதல்வேண்டும். அரசாங்கத்தார் ஆயிரக் கணக்கான தொழிலாளர் வாழ்வு நடாத்தற்கு என் செய்யப் போகிறார்? இவ்வாறு திடீரெனத் தொழிலாளர்க்கு இத்தகை இன்னல் நேராதவாறு காக்கவழி தேடியே தீரல் வேண்டும்.

இந்தியத்தொழிலாளர் இயக்கத்துக்கே பேராபத்து நேரிட்டிருக்கிறது என்று ஊகிக்கலாம். இவ்வேளையில் தொழிலாளர் ஒன்றி நின்று அறக்கிளர்ச்சி செய்வாராக.

## இடியோசை

### இசை வேளாளர் மகாநாடு

இசை வேளாளர் மகாநாடு சென்ற செவ்வாய்க்கிழமை மாயவரத்தில் கூடிற்று. இம்மகாநாடு சென்ற மூன்று ஆண்டுகளாகக் கூடி வருகிறது. இச்சமூகத்தாரை ஒருங்கு திரட்டி ஒழுங்குபடுத்த வேண்டுமென்னும் எண்ணம் மூவலூர் ஸ்ரீமதி இராமாமிர்தம் அம்மாள் அவர்கள் உள்ளத்தில் அரும்பிற்று. அவ்வம்மையார் அதில் முயன்று முயன்று அவ்வினத்தாருக்குத் தொண்டு செய்து வருகிறார். இந்நாளில் நற்றொண்டுக்கு எத்தனை இடையூறு உண்டு என்பது தொண்டில் ஈடுபட்டோர் அனைவருக்குந் தெரிந்ததொன்று. எவர் என்ன கூறினும், எவர் என்ன இடையூறு நிகழ்த்தினும் அவைகளைப் பொருட்படுத்தாது ஸ்ரீமதி இராமாமிர்தம்மாள் உழைத்து வந்தமையால், மாயவரத்தில் சிறப்பாக மகாநாடுகூடலும், அம்மகாநாட்டுக்குக் காந்தியடிகள் மனைவியார் எழுந்தருளலும், காந்தியடிகள் அன்பு மொழி அருளலும் நேர்ந்தன. மகாநாட்டின் வரவேற்புத் தலைவர் ஸ்ரீமான் டி.என். இராஜரத்தினம் பிள்ளையவர்கள் நன்மொழிகளால் ஆண்டுபோந்தவர்களை வரவேற்றுத் தமது மரபினருள் சிலவிடங்களில் பொட்டுக்கட்டும் தீய வழக்கம் நின்று வருகிறதென்றும், சுமார் இருநூற்றைம்பது பெண்மக்கட்கு முறைப்படி திருமணம் நடைபெற்றதென்றும், இம்மூவாண்டுத் தொண்டின் பயன் இஃதென்றுங் குறிப்பிட்டுள்ளார். இன்னுஞ் சின்னாளில் பொட்டுக்கட்டும் தீயவழக்கம் அறவே முற்றும் அழிந்துபட வேண்டுமென்றும், அச்சமூகத்தில் திருமணவாழ்வு ஓங்கி வளரவேண்டுமென்றும் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம். ஸ்ரீமான் இராஜரத்தினம் பிள்ளை இசையைப் பேணவேண்டுமென்று சொற்றது போற்றத்தக்கது. தமிழ்நாட்டில் இப்பொழுது இசை வளம் அருகி நிற்கிறது. அதனால் வசை வளம் பெருகி வருகிறது. ஆதலால் இசை வளம் பெருக அறிஞர்கள் உழைப்பார்களாக. அம்மகாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் கோவை ஸ்ரீமான் என். இலட்சுமண முதலியார். இவர் கோயமுத்தூர் ஜில்லாவில் தொண்டாற்றிப் பொட்டுக்கட்டுந் தீயவழக்கத்தை ஏறக்குறைய களைந்து விட்டாரென்றே கூறலாம். அத்தகைய ஒருவர் தலைமை வகித்துக் கடனாற்றியது பாராட்டத்தக்கது. ஸ்ரீமான் முதலியார் தமது சொற்பொழிவில் டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் சட்டசபையில் கொணரப் போகும் பெண்மக்கள் காப்பு மசோதாவிற்கு ஆதரவு கூறியுள்ளார். நாடு முழுவதும் அம்மசோதாவை ஆதரிக்கவேண்டுமென்று சொல்கிறோம். மகாத்மாகாந்தி அன்று மாயவரத்தில் தேவதாசிகட்கு அறிவுறுத்திய பொன்மொழிகள் மற்றோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவைகளை ஆண்மக்கள் உற்று நோக்கி நல்லறிவு பெறுவார்களாக. பொட்டுக் கட்டிப் பெண்மக்களைத் தீ வழியில் செலுத்துவதைத் தகையக் கோவையிலும் மயூரத்திலுமே கிளர்ச்சி செய்யப்படுகிறது. இக்கிளர்ச்சி நாடுமுழுவதும் பரவ வேண்டுமென்பது எமது கோரிக்கை.

### சென்னைத் தேர்தல்

சென்ற சனிக்கிழமை சென்னையில் நான்கு இடங்களில் நகரபரிபாலன சங்கச் சார்பாகத் தேர்தல் நடைபெற்றது. விவரம் மற்றோரிடத்தில் பார்க்க. இரண்டிடங்களில் சுயராஜ்யக் கட்சிக்குத் தோல்வியும் இரண்டிடங்களில் அக்கட்சிக்கு வெற்றியும் நிகழ்ந்தன. தொழிலாளர்கள் நிரம்பிய பெரம்பூர், சூளை, வேப்பேரி இம்மூன்றிடங்களிலும் இம்முறை சுயராஜ்யக்கட்சிக்குத் தோல்வி நிகழ்ந்தது குறிப்பிடத்தக்கது. வெற்றிபெற்ற அன்பர்கட்கு எமது வாழ்த்து உரியதாக. இனியாதல் நகரசபைக் கூட்டத்தில் அரசியல் கட்சிப் பிணக்கு தலைகாட்டாதிருக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

### சூரன் தலை

சூரபதுமனின் தலையைப்போல் வங்காளத்தில் இரட்டையாட்சி மீண்டும் முளைத்திருக்கிறது. ஸ்ரீ பி. சக்ரவர்த்தியும், ஜனாப் கஸ்நாவியும் இருந்த விடத்தில் இப்போது ஸர் பி. சி. மித்தரும், நவாப் முஷராப் ஹுஸேன் கானும் மந்திரிகளாக வீற்றிருக்கின்றனர். பலமுறை வங்காள மக்கள் வேண்டாமென்று மறுத்த பின்னரும்இரட்டையாட்சிமூட்டையை அவர்கள் மீது சுமத்துவது அறமாகத் தோன்றவில்லை. வங்காள கவர்னர் ஸர் ஸ்டான்லி ஜாக்ஸன் ஏன் தம்மை நகைப்புக் கிடமாக்கிக் கொள்ளவேண்டும்? "இரட்டையாட்சி வீழ்க!" என்னும் மொழிகளால்தான் புதிய மந்திரிகளுக்கு நாம் வாழ்த்துக் கூறமுடியும்.

### சென்னையில்

சென்னைச் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தவரில் பெரும்பான்மையோர் மந்திரி சபையில் நம்பிக்கையில்லையென்று வாக்குக்கொடுத்தனர். ஆயினும் மந்திரிகள் தங்கள் பதவியினின்றும் விலகுவதற்கு எவ்வித ஆயத்தமும் செய்வதாகத் தெரியவில்லை. காங்கிரஸ்-ஜஸ்டிஸ் அங்கத்தவர் என் செய்யப் போகின்றனர்? ரிஸர்வ்பாங்கி, மிஸ் மேயோ, நீல்சிலை முதலியவை குறித்த வெறும் பேச்சுகளில் இம்முக்கிய விஷயத்தைக் காங்கிரஸ்காரர் மறந்துவிட்டதாகக்காணப்படுகிறது. அவர்கள் முனைந்து நின்றால் மந்திரிகள் ராஜிநாமா செய்யும் வரையில் சட்டசபை வேலைகளே நடைபெற முடியாமற் செய்யக்கூடும். அவ்வாறு செய்வார்களா?

### அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தை மீண்டுமொருமுறை தள்ளி வைத்திருப்பதாகப் பொதுக் காரியதரிசி அறிவிக்கிறார். காரியக் கமிட்டியின் படுமோசத் தீர்மானத்துக்குப் பின்னர் அகில இந்திய கமிட்டி கூடுவதற்கு ஒன்றன்பின் ஒன்றாய்த் தடைகள் நிகழ்ந்துகொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஒருமுறை, தலைவருக்கு உடம்பு அசௌக்யம்; அடுத்தமுறை சென்னைக் காங்கிரஸ்காரர்களுக்குத் தேர்தல் வேலை; மற்றொருமுறை வங்காளிகளுக்குப் பண்டிகை! இப்போது அக்டோபர் மாதத்தில் கூட்டம் நடைபெறுமென்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. ஒரேயடியாக அடுத்த காங்கிரஸ் வரையில், ஏன்? ராயல் கமிஷன் செய்தி வரும் வரையில் தள்ளி வைத்து விட்டாலென்ன?

### கட்சி கட்டுப்பாடு

இந்திய சட்டசபையில் காங்கிரஸ்கட்சி கட்டுப்பாட்டிற் சிறந்ததென்று ஒரு காலத்தில் பெயர் பெற்றிருந்தது. இப்போது அக்கட்சி எந்நிலையிலிருக்கிறது? ஓர் உதாரணங்கூறுகிறோம். ரிஸர்வ் பாங்கி மசோதா கொண்டுவரப்படமாட்டாதென்று அறிவிக்கப்பட்டதும் காங்கிரஸ்கட்சியார் வெளியேறினர். பின்னர் அதுகுறித்து நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ள வேண்டாமென்று தீர்மானிக்கப்பட்டது. இத்தீர்மானத்துக்கு விரோதமாக திவான் சமன்லால் அம்மசோதா கைவிடப்பட்டதைப் பற்றி அவசரப் பிரரேபணை கொண்டுவரப் போவதாக அறிவித்தார். பின்னர் கூடிய கட்சியின் கூட்டத்தில் திவான் சமன்லாலின் கட்டு மீறிய செயல் ஆலோசிக்கப்பட்டு முடிவில், அவருடைய பிரரேபணையை ஆதரிப்பதாகத் தீர்மானிக்கப்பட்டதாம்! தலைவர் ஸ்ரீமான் சீனிவாசய்யங்கார் அப்பிரரேபணையின்மீது பேசும்போது "அன்று காங்கிரஸ் கட்சியாரின் சார்பாக நான் பேசிவிட்டதற்குப் பின்னுல் இப்பிரரேபணைக்கு அவசியமில்லை. இருந்தாலும் இதை ஆதரிக்கிறேன்" என்று கூறினாராம். எனவே, இப்போது இந்திய சட்ட சபையிலுள்ள காங்கிரஸ் கட்சி, வாயினால் தலை நடத்தப்படும் நிலைக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. நிலைமை இன்னும் மோசமாவதற்குள் காங்கிரஸ் கட்சியார் சட்டசபை மண்ணை உதறிவிட்டு வெளியேறிக் காங்கிரஸ் பெயரைக் காப்பாற்றுவார்களா?

### சினிமா காட்சிகள்

தற்கால நாகரிகத் தீமைகளுள் ஒன்று சினிமா காட்சி என்பதாக நேயர்களுக்குச் சொல்ல வேண்டுவதில்லை. இந்தியாவில் காட்டப்படும் சினிமா படங்களைப் பரிசீலனை செய்து அநுமதிப்பதற்கும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குள் தயாராகும் படங்களே அதிகமாகக் காட்டப்படும்படி செய்வதற்கும் என்ன ஏற்பாடுகள் செய்யலாமென யோசிக்க ஒரு கமிட்டி அமைக்கவேண்டுமென்று இந்திய சட்டசபையில் அரசாங்கத்தின் சார்பாக ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது. இத்தீர்மானத்தின் மீது விவாதம் தள்ளிப் போடப்பட்டிருந்தாலும் கமிட்டி அமைக்கப்பட்டு விடுமெனத் தெரிகிறது. இத்தீர்மானத்தின் பிற்பகுதியிலுள்ள நோக்கத்தை நாம் பலமாகக் கண்டிக்கிறோம். ஆனால் முற்பகுதியை ஆதரிக்கிறோம். தற்போது இந்தியாவில் காட்டப்படும் சினிமா படங்களில் பெரும்பான்மையன மேனாட்டாரின் இழிந்த நடை உடை பாவனைகளைக் காட்டுவனவாயிருக்கின்றன. இவற்றை இந்திய மக்கள் பார்ப்பதால் மேனாட்டாரைப்பற்றி இழிவான எண்ணங் கொள்வார்களாதலின் படங்களைப் பரிசோதித்த அநுமதிக்க வேண்டுமென்பது அரசாங்கத்தின் கருத்து. மிஸ் மேயோவின் அவதூறுகளைக் குறித்து எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாத இந்திய அரசாங்கத்தார் மேனாட்டாரின் இழிவுகளை மறைப்பதில் கண்ணுங் கருத்துமாயிருப்பது குறிப்பிடத்தக்கது. எனினும், இதற்காக அப்படங்கள் காட்டப்பட வேண்டுமென்று கூறக்கூடிய 'மேயோ' மனப்பான்மையுள்ளவர் இந்தியாவில்இல்லையெனக் கருதுகிறோம். ஆதலின், சினிமா படங்களின் பரிசீலனை அவசியமே. ஆனால் ஏகாதிபத்தியப் படங்களை அதிகரிக்கச் செய்யவேண்டுமென்பதை நாம் பலமாகக் கண்டிக்கிறோம். மேற்படி கமிட்டிக்குத் திவான்பகதூர் அரங்காச்சாரியார் தலைவராம்! அதிகாரவர்க்கத்தின் செல்லப்பிள்ளைகள் ஒரு கணநேரமேனும் உத்தியோக மில்லாத் திண்டாட்டத்துக்கு ஆளாகலாமா? "இந்தியாவின் நன்மையைப் பாதுகாப்பதற்குத் திவான்பகதூர் தகுந்த மனிதரல்லர்" என்று லாலா லஜபதி ராய் கூறியது மிகவும் பொருத்தமுடையதே.

### விவாக வயது

பெண்களுக்கு 12 வயதுக்குக் கீழும், சிறுவர்களுக்கு 15 வயதுக்குக் கீழும் விவாகம் செய்வதைத் தடுக்க ஸ்ரீ ஹரிவிலாஸ சாரதா இந்திய சட்ட சபையில் ஒரு மசோதா கொண்டுவந்தார். இதை அரசாங்கத்தாரின் தரப்பில் மிஸ்டர் கிர்ரார் எதிர்த்தாராம். கல்வியைப் பரப்பும் முயற்சிக்குக் குறுக்கே நின்றுவிட்டுப் பின்னர் இந்தியர்கள் கல்வியில்லாதவர்கள் என்று ஏசுவதும், இராணுவப் பயிற்சி யளிக்கமறுத்துவிட்டுப் பின்னர் இந்தியருக்குச் சுயராஜ்யம் கொடாததற்கு இராணுவப் பயிற்சி இன்மையைக் காரணமாகச் சொல்வதும், சமூகக் குறைபாடுகளைநீக்கும் முயற்சிகளைத் தகைந்து பின்னர் அவற்றை மிகைப்படுத்திப் பிரசாரம் செய்வதும் அதிகார வர்க்கத்தின் தொழில்களாய்ப் போய்விட்டன. அரசாங்கம் எதிர்த்தும் மேற்படி மசோதாவைத் தனிக்கமிட்டியின் ஆலோசனைக்கு விடும் தீர்மானம் நிறைவேறியது குறித்து மகிழ்கிறோம்.



## காந்தியடிகள்

### உண்மையோடியைந்த வாழ்வு

பாகம் 4. அத்தியாயம் 17.

#### கூலி இருப்பிடம் தீக்கிரையாதல்

நோயாளிகளைக் கவனிக்கும் வேலை எனக்கும் என் சகாக்களுக்கும் இல்லாமற் போயிற்றாயினும், கரு மகாமாரி யினின் றெழுந்த இன்னும் பல பிரச்னைகள் முடிவு செய்யப்படாமல் பாக்கியிருந்தன.

'கூலி இருப்பிட' விஷயத்தில் நகர சபையின் அசட்டையைப் பற்றி முன்னமே சொல்லியிருக்கிறேன். ஆனால் நகரவாசிகளில் வெள்ளைக்காரர்களின் சௌக்யத்தைப் பற்றியவரை அது விழிப்புடனிருந்து வந்தது. அவர்களுடைய சுகத்தைப் பாதுகாக்க நகரசபை ஏராளமான பணம்செலவு செய்திருந்தது; இப்போது கொள்ளை நோயை அடியோடு ஒழிப்பதற்குப் பணத்தைத் தண்ணீரைப்போல் வாரி இரைத்தது. இந்தியர்கள் விஷயத்தில் நகரசபை செய்ததை குறித்தும், செய்யாது விட்டதை குறித்தும் அதன்மீது நான் பற்பல குற்றங்கள் சுமத்தியிருந்தேனாயினும், வெள்ளை நகரவாசிகளின் க்ஷேமத்தில் அது காட்டிய அக்கரையைப் பாராட்டாதிருக்க முடியவில்லை. அதன் நன் முயற்சிகளுக்கு என்னாலியன்ற உதவி செய்தேன். நான் ஒத்துழைக்க மறுத்திருந்தால் நகரசபையின் வேலை கஷ்டமாகியிருக்கலாமென்பது என்னுடைய தோற்றம். அப்போது நகரசபை ஆயுதந்தரித்த படைகளை ஏவவும், மற்றும் தன்னாலியன்றதைப் பார்க்கவும் தயங்கியிராது.

ஆனால் அவ்வாறெதுவும் நோமல் தடுக்கப்பட்டது. இந்தியர்களுடைய நடக்கை நகர சபை அதிகாரிகளுக்கு மகிழ்ச்சி தந்தது. இதனால் மகா மாரி சம்பந்தமான நடவடிக்கைகளில் பெரும்பகுதி சுலபமாயிற்று. இந்தியர்களிடம் எனக்கிருந்த செல்வாக்கை யெல்லாம் பயன்படுத்தி நகரசபையின் முறைகளுக்கு இணங்கும்படி செய்தேன். அவ்வாறு செய்தல் இந்தியர்களுக்குக் கஷ்டமாகவே இருந்ததாயினும் அவர்களில் யாரும் என் புத்திமதியைப் புறக்கணித்ததாக எனக்கு ஞாபகமில்லை.

கூலி இருப்பிடத்தைச் சுற்றிப் பலமான காவல் போடப்பட்டது. அநுமதியில்லாமல் உள்ளே போவதோ வெளியே செல்வதோ இயலாமல் செய்யப்பட்டது. எனக்கும் என் சகாக்களுக்கும்மட்டும் நினைத்தபோது உள்ளே போகவும் வெளியே வாவும் அநுமதிச் சீட்டுகள் வழங்கப்பட்டன. அவ்விடத்தில் வசித்த எல்லாரையும் வெளியேறச்செய்து, ஜோகானிஸ்பர்க்குக்கு 13 மைல் தூரத்தில் திறந்த வெளியில் கூடாரங்களில் மூன்று வாரகாலம் வசிக்கச்செய்துவிட்டுப் பின்னர் இருப்பிடத்துக்குத் தீ வைத்துவிட வேண்டுமென்பது நோக்கம். உணவுப் பொருள்களுடனும் மற்றும் அவசியமான சாமான்களுடனும் ஜனங்களைக் கிளப்பிக்கொண்டு போய்க் கூடாரத்தில் சேர்த்து ஒழுங்குபடச் சில நாள் ஆகுமல்லவா? இந்த இடைக் காலத்திற்குக் காவல் அவசியமா யிருந்தது.

ஜனங்கள் பெரிதும் பயப்பிராந்தி யடைந்திருந்தார்கள். நான் அடிக்கடி சென்றலைந்தது அவர்களுக்கு ஆறுதலாயிருந்தது. ஏழைகள்பலர் தாங்கள் மிகுத்தியிருந்த சிறு தொகைகளைத் தரையில் புதைத்து வைத்திருந்தார்கள். அவற்றையெல்லாம் தோண்டி யெடுக்க வேண்டியிருந்தது. அவர்களுக்குப் பாங்கி கிடையாது. பாங்கியென்றாலே தெரியாது. நானே அவர்களுடைய பாங்கியானேன். என் காரியாலயத்தில் பணம் வெள்ளம்போல் பாய்ந்தது. இத்தகைய நெருக்கடியில் என் உழைப்புக்குக் கூலி எதுவும் கேட்பது நியாயமாகாதென்று கருதினேன். எப்படியோ வேலையைச் சமாளித்துக்கொண்டேன். நான் கணக்கு வைத்திருந்த பாங்கி மானேஜரை எனக்கு நன்றாய்த் தெரியும். இந்தப் பணங்களை அவரிடந்தான் போட்டு வைக்க வேண்டுமெனத் தெரிவித்தேன். செப்புக் காசும் வெள்ளி நாணயங்களும் அதிகமாய்ப் பெற்றுக்கொள்ள பாங்கிகள் ஆவலாயில்லை. மகாமாரி பரவியிருந்த பிரதேசத்திலிருந்து வரும் நாணயங்களைத் தொடுவதற்குப்பாங்கி குமாஸ்தாக்கள் மறுத்துவிடலாமென்னும் பயமும் இருந்தது. ஆனால் மானேஜர் எனக்கு எல்லாவழியிலும் உதவினார். நாணயங்களில் நோய்க்கிருமிகள் இருக்க முடியாவண்ணம் அவற்றை மருந்தினால் சுத்தம் செய்து அனுப்பத் தீர்மானிக்கப்பட்டது. ஏறக்குறைய 60,000 பவுன் பாங்கில் போடப்பட்ட தென்பதாக எனக்கு ஞாபகமிருக்கிறது. பணம் அதிகம் வைத்திருந்தவர்களை, தவணைக் கணக்கில் போடும்படி சொன்னேன். அவர்கள் என் யோசனையை ஏற்றுக் கொண்டார்கள். இதன் மூலம் சிலர் பணத்தைப் பாங்கியில் போட்டு வைக்கும் வழக்கத்தைக் கைக் கொண்டனர்.

கடைசியாக, அவ்விடத்திலிருந்த இந்தியர்கள் அனைவரும் தனி ரயில் வண்டிமூலமாக ஜோகானிஸ்பர்க்குக்கு அருகிலிருந்த கிளிப்ஸ்ரூட் பண்ணை என்னுமிடத்துக்குக் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டனர். அங்கு நகரசபை தன் சொந்தச் செலவில் அவர்களுக்கு உணவுப் பொருள்கள் அளிக்க ஏற்பாடு செய்திருந்தது. இவ்வாறு திறந்தவெளியில் கூடாரத்தில் வசித்துப்பழக்கமில்லாதவர்களாதலால் ஜனங்கள் முதலில் வியப்பும் வேதனையும் அடைந்தார்கள். ஆனால் குறிப்பிடத்தக்க அசௌகரியம் எதுவும் அவர்களுக்கு இருக்கவில்லை. 24 மணி நேரத்திற்குள் அவர்கள் தங்கள் துன்பங்களை மறந்து குதூகலமாய் வாழலானார்கள். நான் தினம் ஒருமுறை ஸைகிளில் சென்று அவர்களைப் பார்த்து வந்தேன். நான் போனபோதெல்லாம் அவர்கள் பாடிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் சந்தோஷமாயிருந்தார்கள். மூன்று வாரம் திறந்தவெளியில் வசித்ததின் பயனாக அவர்களுடைய தேகசுகம் பெரிதும் அபிவிருத்தியடைந்தது.

இருப்பிடம் காலி செய்யப்பட்ட மறுநாளே அதற்குத் தீவைக்கப்பட்டதாக எனக்கு ஞாபகம். தீக்கிரையாகாமல் எந்தச் சாமானையும் காப்பாற்ற நகரசபை சிறிதும் விருப்பங்காட்டவில்லை. இதே சமயத்தில் நகரசபை மார்க்கெட்டில் சில செத்த எலிகள் அகப்பட்டதன் காரணமாக, மார்க்கெட்டிலிருந்த மரம் முழுதும் கொளுத்தப்பட்டது. இதில்நகரசபை 10,000 பவுன் கஷ்டமுற்றது.

நகரசபை இவ்வாறு ஏராளமாகச் செலவு செய்யவேண்டியிருந்ததாயினும், அது கொள்ளை நோய் பரவாமல் தடுப்பதில் வெற்றி பெற்றுவிட்டது. மீண்டும், நகரத்தில் பயமின்றி வாழ்தல் சாத்தியமாயிற்று.

## நந்தனார் கோயில்

### கால்கோள் விழா

#### மகாத்மா காந்தியின் உபந்நியாசம்

(ஒரு நிருபரிடமிருந்து)

காந்தியடிகள் சிதம்பரத்தில் ஸ்வாமி ஸகஜாநந்தர் கட்டத் துவங்கியிருக்கும் நந்தனார் ஆலயத்துக்குக் கால் கோள் விழா நடாத்தியபோது, தென்னாற்காடு ஆதிதிராவிட மகாஜன சபையார் மகாத்மாகாந்திக்கு அளித்த வரவேற்புப் பத்திரத்திற்கு அவர் பதில் கூறியதாவது:—

என் அன்பார்ந்த ஸகஜாநந்தர் அவர்களே! நண்பர்களே!

தாங்கள் இப்பொழுது கொடுத்த வரவேற்புப் பத்திரத்தின் ஒரு பிரதியை எனக்கு முன்னதாகவே தாங்கள் அனுப்பியிருப்பதால், அவ்வரவேற்பில் என்ன எழுதியிருக்கிறீர்களென்று நான் அறிவேன். தாங்கள் சொல்லியிருக்கிற பிரகாரம் புராதன ஸத்யாக்ரஹ ரிஷிகளின் நக்ஷத்திரக் கூட்டத்தில் நந்தனார் என்பவர் ஓர் உண்மையான பிரகாசமான நக்ஷத்திரமாய் விளங்குகிறார். அம்மகான் கோயிலின் வாயினிலைக்கால் நாட்டுவதற்கு, எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததை ஒரு பாக்கியமாய்ப் பாவிக்கிறேன். இந்த ஊரில் நான் செய்யவேண்டிய வேலைகளுள் ஒரு கோயிலின் ஸ்தாபனத்தை முதல் முதலில் செய்யக் கிடைத்தது எனக்கு மகத்தான பாக்கியமாகும். நந்தனார் ஈசுவரனை எப்படி நேருக்கு நேர் கண்டு புனிதமானாரோ, அம்மாதிரி இந்தக் கோயிலில் ஒவ்வொருவரும் காண்பார்கள் என்று நம்புகிறேன். இந்தக்கோயிலில் ஒவ்வொருவரும், வித்தியாசமின்றி, சுயேச்சையாய்க் கடவுளைத் தொழலாம் என்று நினைக்கிறேன். நந்தனார் தம்முடைய ஜீவனைக்கொடுத்தது, கல்லினாலும், சுண்ணாம்பினாலும் கட்டப்பட்டகோயிலில் நுழைய அன்று. அவர் தம் ஆத்மா விடுதலையடையவே ஸத்தியாக்ரகம் செய்தார். இப்பொழுது இந்நாட்டில் பிராமணர்கள் என்பவர்களால் நுழையப்பட்ட அநேகம் கோயில்கள், உண்மையான கோயில்கள் அல்ல. இந்நாட்டை விகாரப்படுத்தும்படியான கல்லாலும், சுண்ணாம்பாலும் ஆகிய கட்டிடங்கள். இத்தகைய கோயில்களுள் இதுவும் ஒன்றாகாமலிருக்க நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். ஆகையால் இந்தக் கோயிலின் தர்மகர்த்தர்கள், தங்கள் மனதில் கோபம் என்பதையே வைக்கக்கூடாது.

நான் அநேக இடங்களில் கண்டிருப்பதைப் போலல்லாமல், இந்த இடத்தில் உண்மையான இந்து மதத்தை அழிப்பதற்குப் பதிலாக இந்துமதத்தைப் பரிசுத்தமாக்க முயல்வதைக் காண நான் சந்தோஷப்படுகிறேன். நல்லதைக் கைக் கொண்டு தீயதை விலக்கிப் பாடுபட உங்கள் பகுத்தறிவை உபயோகித்ததில் நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

ஆத்மசக்தியினால் உங்களுடைய அந்தஸ்தையடைய முயல்வதின் பொருட்டு உங்களை நான் மிகவும்பாராட்டுகிறேன். ஆதிதிராவிடர்கள் இந்நாட்டின் புராதனப்புதல்வர்கள், என்பதை நான் அங்கீகரிக்கிறேன். தாங்கள், தங்கள் முன்னேற்றத்தை உத்தேசித்துப் பாடுபடப் பின்வாங்க மாட்டீர்களாகையால், நான் உங்களுக்கு இரண்டொரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன்.

முதலாவது, இந்நாட்டிலுள்ள ஆதிதிராவிடரில் குடியாதவர் அநேகமாய் இல்லை. ஆகையால், இச்சமூகத்தாரில் இந்தக் குடியை நிறுத்தப் பாடுபடவேண்டும். ஆதிதிராவிடரில் பெரும்பாலோர், கோமாமிசம் புசிக்கிறார்கள் என்று நான் நினைப்பது தவறாக இருக்கலாம். இந்து மதமானது, எல்லாவற்றிற்கும் இடம் கொடுக்குமென்றாலும், கோமாமிச பக்ஷணத்திற்கு மாத்திரம் இடம் தரவேயில்லை. பசுவானது ஒரு தெய்வீகப் பிராணி. ஆகையால் ஒவ்வொரு ஆதிதிராவிடரும், கோமாமிசம் சாப்பிடுவதை நிறுத்தும் வகையில் ஸகலவிதப் பிரயத்தனங்களும் செய்யப்படவேண்டும். பசுக்களைக் கொல்வதை நிறுத்தவேண்டும்.

தங்கள் வரவேற்பில், தீண்டாமை யொழியாமல் கதர் வெற்றியடையாது என்று சொல்லுகிறீர்கள். இதில் ஏதோ தப்பபிப்பிராயம் இருப்பதாகத் தெரிகிறது. நீங்கள் எழுதியிருப்பதைத் திருப்பிப் படித்தால் தான் உண்மையாயிருக்கும். அதாவது, இந்தியா முழுவதிலும் கதரியக்கம் பரவினாலொழிய, தீண்டாமை உண்மையாய் நாட்டைவிட்டு விலகாது. அநேகம் ஆதிதிராவிடர்களை விட அநேக இந்தியர்கள் ஏழ்மை நிலையில் இருக்கிறார்கள் என்பதை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். ஒரு வேளைக்குக் கூட ஆகாரம் இல்லாமலிருக்கும் ஜனங்களுள்ள ஊர்களுக்கு நான் உங்களை அழைத்துப் போகக்கூடும். ஆகையால் கதரை

# மகாத்மா காந்தியும் வைதிகர்களும்

"மாறுதல் வேண்டாதான்" எழுதுவது

"பாலிய விதவைத்தனம், தீண்டாமை என்னும் களங்கங்களை நீக்காவிடின் ஹிந்து மதம் நாசமடையும்" என்று மகாத்மா காந்தி கூறுகிறார். அவரைக் கண்டிக்கக் குடந்தையில் நடந்த கூட்டத்தில், மகா பெரிய பண்டிதரொருவர், மகாத்மாவின் மேற்படி கருத்தைக் குறிப்பிட்டு, "ஹிந்து மதத்தின் மூலாதாரமான தர்மங்கள் இல்லாது போகும்படி ஹிந்து மதத்தை விடுவதைவிட, ஹிந்துமதம் அழிந்துபோவதே உசிதமென்று நான் நினைக்கிறேன்" என்று சொன்னாராம்.

* * *

"ஹிந்து மதத்தின் மூலாதாரமான தர்மங்கள்" பாலிய விதவைத் தனமும் தீண்டாமையும்தான் என்று இப்பண்டித சிரோமணி கருதுகிறார் போலும்!

* * *

பாலிய விதவைகளும், தீண்டாதாரும் ஹிந்து சமூகத்தில் இல்லாமற்போகும் போது அப்பண்டிதர் ஹிந்து மதத்தைத் துறந்து வேறு மதம் புகுந்து விடுவார் போலும்!

* * *

தீண்டாமை விலக்கு முயற்சியைத் தடுப்பதற்கு நல்ல யுக்திதான்! "தீண்டத்தகாதவர்" எனப்படுவோர் பிறமதம் புகுந்துவிடுவார்களென்பது தீண்டாமை விலக்கின் அவசியத்துக்குத் தற்போது ஒரு காரணமாகச் சொல்லப்படுகிறது. தீண்டாமை போய்விட்டால் நமது பண்டிதரைப்போன்றவர்கள் பிறமதங்களுக்குப் போய்விடுவார்களாதலால், தீண்டாமை இருக்கத்தான் வேண்டும் என்று இனிமேல் சொல்லலாம் அல்லவா? ஆனால் பண்டிதர்களின் யுக்தி பலியாது என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

மேற்படி கூட்டத்தில் மகாத்மா காந்தியை 'அவன்' என்று குறிப்பிட்ட ஆசிரியர் சுந்தரராமையர் "நான் கடவுளைக் கூட "அவன்" என்று தான் சொல்லுகிறேன். அதில் ஒரு தவறுமில்லை" என்றாராம். அதை ஆதரித்துப் பேசிய பண்டிதரொருவர் "இது சம்ஸ்கிருதம் தெரிந்தவர்களுக்குத் தெரியும்" என்றுரைத்தாராம்.

* * *

வடமொழி விற்பன்னர்களான மேற்படி ஆசிரியரும் பண்டிதரும், சென்னைக் கவர்னர் பிரபுவையோ, நிர்வாக சபை அங்கத்தவர் ஸர் சி. பி. இராமஸ்வாமி ஐயரையோ அல்லது சாதாரணமான ஒரு ஜில்லா கலெக்டரையோ 'அவன்' 'இவன்' என்று குறிப்பிடுவார்களா? தெய்வத்தை 'அவன்' என்றும் சொல்லலாம்; இன்னும் என்ன வேண்டுமானாலும் சொல்லலாம். அதிகாரவர்க்கத் தெய்வங்களை அப்படிச் சொன்னாலல்லவா சம்ஸ்கிருத மறியாத சாமான்ய ஜனங்களுக்கு அதில் தவறில்லையென்பது புலனாகும்?

* * *

காலஞ்சென்ற மார்லி பிரபு பெரிய நாஸ்திகர். அவர் ஒரு நாள் ஒரு தேவாலயத்தின் வழியாகச் செல்ல நேர்ந்தபோது தமது தொப்பியை எடுத்து மரியாதை செய்தாராம். அருகிருந்தவர் "நீர் நாஸ்திகராயிற்றே. எதற்காகத் தேவாலயத்திற்குமரியாதைசெய்கிறீர்?" என்று கேட்டபோது மார்லி பிரபு "நான் நாஸ்திகன் தான். ஆனால் பொதுஜனங்களுக்கு மரியாதை செய்பவன். ஆயிரக்கணக்கான மக்கள் இக்கட்டடத்தைத் தேவாலயம் என்று கருதுகிறார்கள். அவர்களுடைய உணர்ச்சியை மதித்து நான் இதற்கு மரியாதை செய்கிறேனேயன்றி வேறில்லை" என்றாராம்.

* * *

கும்பகோணத்துப் பண்டிதர்களுக்கு மார்லியின் பெருந்தன்மையில் கொஞ்சம் இருந்திருந்தால் அதனால் அவர்களின் பாண்டித்யம் குறைந்து போயிருக்குமா என்ன?

* * *

மகாத்மா காந்தியை 'அவன்' 'இவன்' என்று கூறிய மற்றொரு பெரியவரைப் பற்றி இப்போது எனக்கு ஞாபகம் வருகிறது. ஒத்துழையா இயக்கம் தீவிரமாய் எழுந்து கொண்டிருந்தகாலத்தில் ஸ்ரீமான் சத்திய மூர்த்தி மன்னார்குடிக்கு விஜயம் செய்து அவ்வியக்கத்தைத் தாக்கி ஓர் உபந்நியாசம் செய்தார். இடையில், தமக்கு வழக்கமான பெருமித நடையில் "காந்தி சொல்கிறான்:—" என்று அவர் எடுத்துச் சொல்லத் தொடங்கியபோது ஜனங்கள் ஆட்சேபித்தனர். "ஸ்ரீராமச்சந்திரனையும், கிருஷ்ணபரமாத்மாவையும் பற்றி 'ராமன் வந்தான்' 'கிருஷ்ணன் சென்றான்' என்று ஏகவசனத்தில் தானே பேசுகிறோம்?" என்று கர்ஜித்தார் சத்திய மூர்த்தி. "மகாத்மாவை அவ்வளவு உயர்வாய் மதித்தால் அவருடைய இயக்கத்தைத் தாக்கமாட்டீர்களே?" என்றார்கள் ஜனங்கள். இதற்கு அவர் என்னபதில் சொன்னாரென்பது எனக்கு ஞாபகமில்லை.

* * *

பிற்காலத்தில் ஸ்ரீமான் சத்திய மூர்த்தியின் மதிப்பில் மகாத்மா வெகுவாகத் தாழ்ந்து போயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஏனெனில் இப்போது அவர் மகாத்மாவைப்பற்றி ஏகவசனத்தில் பேசுவதாகவே கேள்விப்படுகிறதில்லை.

* * *

மகாத்மாவைக் கும்பகோணம் பண்டிதர்கள் பேட்டி காணச் சென்றபோது - மன்னிக்கவேண்டும் - மகாத்மாவுக்கு அவர்கள் தரிசனம் கொடுக்கச் சென்றபோது, அவருடைய சம்ஸ்கிருத ஞானத்தைப் பரிசோதிப்பதற்காகச் சம்ஸ்கிருதத்தில் பேசினார்களாம். அவருக்குப் போதிய சம்ஸ்கிருத ஞானமில்லை யெனக்கண்டு வருந்தினார்களாம்.

* * *

வடமொழியைக் கரைகண்ட இப்பண்டிதர்களின் மனப்பான்மையைக் காணும்போது மகாத்மாவின் சமஸ்கிருத ஞானம் இந்த அளவிலேயே நிற்பதுகுறித்து நாம் மகிழ்ச்சியடைய வேண்டியதாயிருக்கிறது.

* * *

"எங்களுக்கு சம்ஸ்கிருதம் நன்றாகத் தெரியும். நாங்கள் சம்ஸ்கிருதம் புதிதாகக் கற்றவர்களல்லர்" என்று பண்டிதர்கள் கூறியபோது மகாத்மா கேட்டு நகைத்ததும் இக்கருத்துடன்தான் போலும்!

* * *

மகாத்மா காந்தி அரசியல் விஷயங்களைப் பற்றிப் பேசுவதற்கில்லாமல் சுயராஜ்யக்கட்சியார் செய்து விட்டனர். இப்போது, அவர் சமூக விஷயங்களைப்பற்றிப் பேசக்கூடாதென்று கும்பகோணம் வைதிகர்கள் சொல்கின்றனர். யார் யார் என்னென்ன விஷயங்களைப் பற்றிப் பேசக்கூடாதென்கிறார்களோ அவற்றையெல்லாம் விட்டுவிடுவதாயிருந்தால் கூடிய சீக்கிரத்தில் மகாத்மா "மௌனத்மா"வாக ஆகிவிட வேண்டுவது தான்.

* * *

கடைசியாக ஒரு வார்த்தை. வைதிகர்கள் மகாத்மாவை எதிர்க்கத் தொடங்கி யிருக்கிறதை முன்னிட்டேனும், இனி மகாத்மாவின் இயக்கத்தை "வைதிக ஒத்துழையாமை" என்று அழைப்பது விட்டு விடப்படுமென நம்புகிறேன்.

---

யணியாத ஆதிதிராவிடர்களைக் காண என் மனம் புண்படுகிறது. ஆகையால் இந்தக் குறை நீங்க வேண்டும். இந்த இடத்தில் ஆதிதிராவிடர்களுக்கென்று ஒரு நெசவுச்சாலை ஏற்படுத்த உதவி செய்தல் எனக்குச் சந்தோஷத்தைத் தரும். நான் இரண்டொரு நிபந்தனைகளுக்குட்பட்டு, இந்தக் கதர் நெசவுசாலைக்கு உதவிசெய்கிறேன்:— இந்த நெசவுசாலையில், கைராட்டினத்தில் நூற்ற நூலைத் தவிர வேறு நூலை உபயோகிக்கக் கூடாது. இதற்குச் சம்மதமானால் நீங்கள் உடனே அகில இந்திய சர்க்கா சங்கத்தின் தமிழ்நாட்டுக் காரியதரிசியாகிய ஸ்ரீமான் எஸ். இராமநாதனுடன் கடிதப் போக்குவரவு வைத்துக்கொள்ளுங்கள். அவரை எந்நேரத்திலும் காணவும் அவராலாகிய உதவியை யடையவும் கூடும். அவரும் நானும் கதருக்காகவே ஜீவித்திருக்கிறோம்.

நான் சொல்லியபடி இந்தக் கோயிலை நடத்துவதாய்த் தோற்றுவதால் உங்களுக்கு இரண்டொரு விஷயம் தெரிவிக்க விரும்புகிறேன். ஸ்வாமி விவேகானந்தர் கூறியதாவது:— "யாராவது ஓர் இந்தியனானவன் நம் நாட்டு நூலை ஆராய்ச்சி செய்ய விரும்பினால், அவன் முதல் முதலில் ஸம்ஸ்கிருதம் கற்றுக்கொள்ளவேண்டும்" என்கிறார். இந்த உண்மையை நன்றாய் அறிந்த ஸ்ரீ நாராயண குருஸ்வாமிகளின் குருகுலத்தில் பயில்பவர்கள், ஸம்ஸ்கிருத சுலோகங்களைச் சுத்தமாகவும் நன்றாகவும் சொல்வதைக்கேட்டுச் சந்தோஷமடைந்தேன். உங்களையும் அம்மாதிரி செய்யவேண்டுகிறேன். நீங்கள் அறிவாளிகளா யிருந்தால், ஹிந்திபாஷையைக் கற்றுக்கொள்ள முயல்வீர்கள் என்று நம்புகிறேன். ஹிந்தி பாஷை கற்றால் விந்திய பர்வதத்தையும் தாண்டலாம். வட இந்தியர்களின் மனதைக் கவரச்செய்யலாம்.

உங்களுக்கு மற்றொரு முறையும் வந்தனம் செய்கிறேன். இந்தக் கோயிலில், உங்கள் வரவேற்பில் கண்டபடி, நான் மேலே சொல்லிய பிரகாரம் நடத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

# மதிப்புரை

## ஜவாஹிருல் 'புர்:கான்

குர் ஆன் ஷரீபின் தமிழ்மொழி பெயர்ப்பும் அதன் விரிவான வியாக்யானமும் ஒருங்கே கூடிய ஜவாஹிருல் 'புர்:கான் என்னும் நூலின் முதல் இரண்டு வெளியீடுகளைப் பற்றி நாமெழுதிய மதிப்புரைகள் நேயர்கள் நினைவிலிருக்கலாம். இப்பொழுது மூன்றாம் வெளியீடாக, "அம்மயத்" என்னும் பாகம் வரப்பெற்றோம். இந்நூலைத் தமிழில் பெயர்த்துத் தமிழ் நாட்டுக்குப் பெருந்துணை செய்து வரும் அறிஞர் தாவுத்ஷா அவர்களைப் பற்றியும், அவரது தமிழ்ப் புலமையைப் பற்றியும், மொழி பெயர்க்குந் திறனைப்பற்றியும், நாம் புதிதாக ஒன்றுங் கூறவேண்டுவதில்லை. தமிழுலகம் அறிஞர் தாவுத்ஷா அவர்களை நன்கு அறிந்திருக்கிறது.

இப்பகுதியின் முன்னுரையில் "நமது ஜவாஹிருல் 'புர்:கா''ன் மூன்றாவது பிரசுரமாக இந்த முப்பதாவது பாகம் (அஃதாவது, :குர் ஆன் ஷரீபின் இறுதிப் பகுதி) இப்பொழுது வெளி வந்திருக்கிறது. பொதுவாக "ஜவாஹிருல் 'புர்:கா''னின் வியாக்கியானமானது விரிவுரையாக விரிந்துகொண்டே போவதனால் இந்த முப்பதாவது பகுதியை அந்த வியாக்கியானம் வந்து எட்டுவதற்கு முன்னர்ப் பல ஆண்டுகள் கழிந்துவிடக்கூடுமாதலினாலும், இவ்விறுதிப் பகுதியிலேயே முஸ்லிம் சகோதரர்களின் தொழுகை முதலிய அனுஷ்டானத்துக்கு ஒவ்வொரு நாளும் உபயோகமாய் வரும் சிறுசிறு அத்தியாயங்களெல்லாம் மல்கிக் கிடப்பதனால் இவற்றின் கருத்தையும் வியாக்கியானத்தையும் அதிக தாமதமில்லாது அறிந்துகொள்ள வேண்டுவது அத்தியாவசியமென்று காணப்பட்டதனாலும் இவண் இம் முப்பதாவது பாகம் எடுத்துக்கொள்ளப் பட்டதென்று அறிவித்துக்கொள்கிறோம். இனி "ஜவாஹிருல் 'புர்:கான்" இரண்டாவது வெளியீட்டில் விடப்பட்ட இடத்திலிருந்து இன்ஷா அல்லா(ஹ்) அவ்வியாக்கியானம் தொடர்ந்து செல்லப்படும். இம்மொழி பெயர்ப்புக்கு வேண்டிய உயர்தரமான மௌல்வீ 'பா'ஜில் சாஹிப்' ஒருவரும் உடனிருந்து உழைத்து வருகிறாரென்பது எல்லோருக்கும் நன்கு தெரியக் கிடக்கின்றது; எனவே இவ்வேலையானது இனி அதிகம் தாமதப்படாமல் நடைபெறலாமென்று எதிர் பார்க்கிறோம்."

எனவரூஉம் உரைகளால் இம்முப்பதாவது பகுதியின் வெளியீட்டின் அவசியமும், பிறவும் நன்கு புலனாகின்றன.

மிகவும் அரிதில் முயன்று தமிழ்வளர்த்து வரூஉம் அறிஞர் தாவுத்ஷா அவர்கட்கு நமது நன்றியுரியதாக.

இம்முப்பதாம் பாகத்தைப் பொதுவாகத் தமிழ்மக்கள் அனைவரும், சிறப்பாக இஸ்லாமியானவர்களும் வாங்கிவாசித்துப் பயன் பெறுவார்களாக. விலை ரூபா இரண்டு. விலாசம்: குர்ஆன்பிரசுராலயம், தபாற்பெட்டி நெ. 15, சென்னை.

## "இஸ்லாம்"

"இஸ்லாம்" என்னும் பெயர் வாய்ந்த தமிழ்மாதப்பத்திரிகையின் இரண்டு இதழ்கள் எமது பார்வைக்கு வந்தன. பத்திராசிரியர் ஸ்ரீமான் மௌ. ஆ-அபுல் ஹாதாஎன்றுகண்டு மகிழ்வெய்துகிறோம். ஸ்ரீமான் அபுல் ஹாதா பலசமய ஆராய்ச்சி யுடையவர்; தமிழன்பர்; தேசபக்தர்; ஒத்துழையாக் காலத்தில் சிறைக்கூடமும் நண்ணியவர். இத்தகை அநுபவமுடைய ஒருவர் தமிழில் பத்திரிகை நடாத்த முன்வந்தது குறித்து அவருக்கு எமது நன்றியறிதலைச் செலுத்துகிறோம்.

"இஸ்லாம்" இரண்டு இதழ்களையும் உற்று நோக்கினோம். அவைகளில் இஸ்லாம் மதத்தைப்பற்றிய கட்டுரைகளோடு, வேறு பல உலகியல் கட்டுரைகளும் மிளிர்கின்றன. கட்டுரைகள் தக்கவர்களால் எழுதப்பட்டிருத்தில்கண்டு உவகை யெய்துகிறோம். ஆசிரியர் குறிப்புக்கள் செவ்விதில் அமைந்திருக்கின்றன. ஒரு குறிப்பில் "பிறமத துவேஷத்தையேனும், சமூக சச்சரவுகளையேனும், வீண் விவாதத்தையேனும் உண்டாக்கக் கூடிய பதங்களை உபயோகிக்க வேண்டாம்." என்று போந்துள்ள கருத்து பத்திரிகை நோக்கை அறிவுறுத்துகிறது.

உயிருக்குச் சமய ஞானத்தையும் உடலுக்கு உலகியலையும் வளர்க்கும் நோக்குடன் வெளிவரும் "இஸ்லாம்" என்னும் பத்திரிகையை வாழ்த்துகிறோம். தமிழ் மக்கள் அப்பத்திரிகைக்கு ஆதரவு நல்குவார்களாக. வருட சந்தா "இந்தியா, பர்மா, இலங்கை முதலிய உள்நாடுகளுக்கு, முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் சங்கங்களுக்கும் ரூ. 5-0-0; முஸ்லிம்களல்லாத நண்பர்களுக்கும் முஸ்லிம்களல்லாதார் சங்கங்களுக்கும் ரூ. 4-0-0; மாணவர்களுக்கு (முஸ்லிம்களானாலுஞ் சரி, முஸ்லிம்களல்லாதாரானாலுஞ் சரி) ரூ. 3-8-0. பினங்கு, சிங்கப்பூர், மலாய் முதலிய வெளிநாடுகளுக்கு, முஸ்லிம்களுக்கும் முஸ்லிம்கள் சங்கங்களுக்கும் ரூ. 6-0-0; முஸ்லிம்களல்லாத நண்பர்களுக்கும் சங்கங்களுக்கும் ரூ. 5-0-0; மாணவர்களுக்கு (முஸ்லிம்களானாலுஞ் சரி, முஸ்லிம்களல்லாதாரானாலுஞ் சரி) ரூ. 4-8-0." விலாசம்: மனேஜர் "இஸ்லாம்" ஆபீஸ், 225, அங்கப்ப நாய்க்கன் தெரு, ஜார்ஜ்டவுன்-சென்னை.

# நீலன் சிலைப்போர்

13உ செவ்வாய்க்கிழமை மாலை தமிழ்நாடு இளைஞர் படையைச் சேர்ந்த திருமங்கலம் தாலுக்கா வாசியான அழகப்பன் என்ற 20 வயதுடைய தொண்டர் கோடரி தாங்கி சிலையருகே வந்து பொதுஜன அமைதிக்கு ஊறு நேருமாறு நடந்துகொண்டதாகக் கைது செய்யப்பட்டு அடுத்தநாள் மாஜிஸ்ட்ரேட் முன் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டார். அவருக்கு மாஜிஸ்ட்ரேட் 3 வார காவல் தண்டனையும் 50 ரூபா அபராதம் அல்லது ஒருவாரம் வெறுங்காவல் தண்டனையும் விதித்து ஒரு வருஷத்துக்கு நன்னடக்கை ஜாமீன் கொடுக்க வேண்டுமென உத்தரவிட்டார். அடுத்தாற்போல் வாலாஜாபாத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஜமதக்னி நாயகர் வழக்கு விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது. கோர்ட்டார் எதிரியைக் கேட்டதற்குத் தாம் இண்டர் மீடியட் பரீட்சை தேறினவரென்றும் சட்டசபை அங்கத்தவர் கிருஷ்ணசாமி நாயகரின் பந்துவென்றும் அவர் போஷணையிலிருந்து அவருக்குச் சட்டசபை சம்பந்தமான உதவிகள் புரிந்து வந்ததாயும் தெரிவித்தார். கோர்ட்டார் எதிரியைக் குற்றவாளியெனக் கண்டு 3 மாத கடுங்காவல் தண்டனையும் 50 ரூபா அபராதமும் கட்டத்தவறினால் அதற்காக ஒருவார வெறுங்காவல் தண்டனையும் விதித்து ஒரு வருடத்துக்கு நன்னடத்தை ஜாமீன் தரவேண்டுமென உத்தரவிட்டனர்.

15உ வியாழக்கிழமை தமிழ்நாட்டுத் தொண்டர் படைத் தலைவரும் நீலன் சிலைப் போர் தலைவருமான திரு ஜி. எம். சாமிநாத முதலியார் மீது 108-வது பிரிவின்படி ஜாமீன் நடவடிக்கை வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. அரசாங்க தரப்புக்காக நான்கு சாட்சிகள் விசாரிக்கப்பட்டன. முதலியார் சாட்சியம் விடவில்லை; குறுக்கு விசாரணை செய்யவில்லை. கோர்ட்டார் ஏதேனுங் கூறலாமெனக் கேட்டதற்கு நீண்டதொரு வாக்குமூலம் கொடுத்தார். அதில் இத்தேச ஆட்சிமுறை மாறுபடும் வரை நீலன் சிலை எடுபடும்வரை இவ்வியக்கம் நிகழ்ந்துகொண்டே யிருக்குமென்று குறிப்பிட்டார். அடுத்தநாள் கோர்ட்டார் ஒரு வருட நன்னடக்கை ஜாமீன் கொடுக்க வேண்டுமென்றும் தவறினால் ஒரு வருட காலமோ ஜாமீன் கொடுக்கும் வரையுமோ சாதாரண காவல் தண்டனை அநுபவிக்க வேண்டுமென்றுங் கூறினர்.

19உ திங்கட்கிழமை மாலை பறங்கிமலையைச் சேர்ந்த ஸ்ரீ சுந்தரவடிவேலு என்பவர் கையில் கோடரியுடன் நீல் சிலையைத் தகர்க்கச் சென்றதாகக் கைது செய்யப்பட்டார். மறுநாள் மேற்படியாரின் வழக்கு விசாரணைக்கு வந்தது. எதிரி மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவே 4 அணா அபராதத்துடன் விடப்பட்டார்.

20உ செவ்வாய்க்கிழமை பிற்பகல் ராமநாதபுரத்தைச் சேர்ந்தவரும் தமிழ்நாட்டு இளைஞர் படைத் தொண்டருமான ஸ்ரீமான் எம். இராமசாமி பிள்ளை நீல் சிலையைத் தகர்க்கச் சென்று கைது செய்யப்பட்டார்.

---

மைசூர் சமஸ்தானத்தைச்சேர்ந்த மலைநாடு பிரதேசத்தில் வீரண்ணன் என்பவன் தன் பேரப்பிள்ளையான ஆறுவயதுச் சிறுவனுடன் தலையில் விறகு சுமந்து போய்க்கொண்டிருந்தபோது ஒரு சிறுத்தைப்புலி தன் மீது பாய வருவது கண்டு அதன்மீது விறகுச்சுமையை எறிந்தானாம். அது தப்பிமறுபடியும் பாய வரவே, அவன் மேற்படி சிறுவனை விட்டு விட்டு ஓட்டம்பிடித்தானாம். பின்னர் அவன் கிராமவாசிகள் சிலருடன் திரும்பிவந்து சிறுவனைத்தேடி அலைந்தானும் நாள் முழுதும் தேடியும்பயனில்லை. மறுநாள் காலையில் அவர்கள் வீடு திரும்பிக்கொண்டிருந்தபோது ஒரு வாய்க்கால் ஓரமாய்ச் சிறுவன் வருவதையும் அவன் பின்னே சிறுத்தை நாய்போல் தொடர்ந்து வருவதையும் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். பின்னர் ஒரு கழியில் துணியைச் சுற்றிக் கொளுத்தி எறியவே சிறுத்தை ஓடிவிட்டதாம். பையனை மீட்டுக்கொண்டுவந்தார்களாம். இந்த அதிசயத்துக்குக் காரணம் எதுவும் தெரியவில்லையாம்.











# உதிர்ந்த மலர்கள்

போபால் மாஜி பீகம்:—நான் கிழவி; தள்ளாதவள். ஆயினும் இச்சந்தர்ப்பத்தில் வெளிவந்த ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை என்னும் பரிசுத்த இலட்சியத்துக்காக என்னாலியன்ற ஊழியம் செய்யத் தயாரா யிருக்கிறேன்.

* * *

ஸ்ரீ ஹரிவிலாஸ் சாரதா (இந்திய சட்டசபையில் கலியாண வயதை நிர்ணயிக்கும் மசோதாவின்மீது):—பருவமடைந்து மூன்று வருஷமாவதற்குமுன் பெண்ணுக்குக் கலியாணம் செய்யக் கூடாதென்று மனு விதித்திருக்கிறார். எனவே, மனு தர்மத்தின்படி பெண்களுக்கு 16 வயதுக்குள் மணம் செய்யக்கூடாது.

* * *

ஸர் புருஷோத்தமதாஸ்:—கலியாண வயதையும், மதத்தையும் சம்பந்தப் படுத்துபவன் பைத்தியக்கார வைத்திய சாலைக்கே தகுதியானவன். (கரகோஷம்)

* * *

லாலா லஜபதிராய்:—அரசியலிலும்பொருளாதாரத் துறையிலும், சமூக சீர்திருத்தத்திலும் எங்கள் முன்னேற்றத்துக்குத் தடையாய் நிற்பவர் அரசாங்கத்தாரே. கலியாண வயதை உயர்த்த வேண்டுமென்றால் பொதுஜன அபிப்பிராயத்தைக் கேட்கவேண்டுமென்கிறார்கள். அரசாங்கத்தார் வேறு விஷயங்களில் பொதுஜன அபிப்பிராயத்தைப் பற்றிக் கவலைப்பட்டதுண்டா? (நகைப்பு)

* * *

மேற்படியார்:— என்னிடம் அதிகாரமிருந்தால் பெண்களுக்கு 16 வயதுக்குக்கீழ் கலியாணம் செய்யக்கூடாதென்று உடனே சட்டமியற்றி விடுவேன். எங்களிடம் சட்டம் செய்யும் அதிகாரம் இருந்திருந்தால் தீய வழக்கங்கள் எல்லாம் நீண்ட நாளைக்கு முன்பே போயிருக்கும். (கரகோஷம்) இம்மாதிரி விஷயத்தில் ஓரளவு கட்டாயப் படுத்தித்தான் தீரவேண்டும்.

* * *

ஸ்ரீ ஜெயக்கர்:—யோசனை செய்ய வேண்டுமென்கிறீர்கள். 12 வயதுள்ள பெண்ணோ, சிறுவனோ விளையாடுமிடத்தில் இருக்கவேண்டுமா, கலியாணப் படுக்கையில் இருக்கவேண்டுமா என்று தீர்மானிக்க நிரம்ப யோசனை செய்யவேண்டுமா? வீடு தீப்பற்றி எரிந்தால் அதை அணைப்பதற்கு நீங்கள் யோசனைசெய்துகொண் டிருப்பீர்களா?

* * *

மேற்படியார்:— பொதுஜன அபிப்பிராயத்தைக் கலந்துகொள்ள வேண்டுமாம். ஐ. எம். எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த ஆங்கிலேயன் 12 வருஷ ஊழியம் செய்துவிட்டால் 37,000 ரூபா இனாம் பெறலாமென்று தீர்மானித்தபோது பொதுஜன அபிப்பிராயத்தைக் கலந்துகொண்டா செய்தீர்கள்? (கரகோஷம்) சுயராஜ்யம் எப்போதேனும் வந்தால் இம்மாதிரி மசோதாவை நாங்கள் ஒரே நாளில் சட்டமாக்கி விடுவோம்.

* * *

ஸ்ரீமான் சீனிவாசய்யங்கார்:— பொதுஜன அபிப்பிராயம் நிரம்பமாறுதலடைந்திருக்கிறது. இப்போதுங்கூட, பிராமணர் உள்ளிட்ட வைதிக உயர் வகுப்பாரில் பெரும்பான்மையோர், சாதி பகிஷ்கார பயமில்லாமல், தங்கள் பெண்கள் பருவமடைந்த பின்னரே கலியாணம் செய்துகொடுக்கிறார்கள்.

* * *

முன்ஷி ஈசுவர சாரணர்:— சாஸ்திரங்கள் இயற்கைச் சட்டங்களுடன் முரண்பட்டால் அத்தகைய சாஸ்திரங்கள் போக வேண்டியதே. (கரகோஷம்) ஹிந்து சமூகம் காலத்திற்கேற்ப மாறி வந்திருக்கிறபடியால்தான் இதுகாறும் அழியாமலிருந்து வருகிறது.

* * *

ஸ்ரீமான் எம். கே. ஆச்சாரியார்:—கலியாண வயதை நிர்ணயித்துச் சட்டம் செய்வதை இதற்குமுன் நான் ஆட்சேபித்திருக்கிறேனாயினும் இப்போது ஆதரிக்கிறேன். இவ்விஷயத்தைப் பற்றிப் பாட்டிமார்களுடன் பேசியதின் பயனாக என் அபிப்பிராயம் மாறுதலடைந்திருக்கிறது. (சிரிப்பு)

* * *

ஸ்ரீமான் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் (தமிழ்நாடு நிருபரிடம்):—பலருடைய விருப்பத்திற்கு விரோதமாக மகாத்மா காந்தியைப் பார்க்க வருவோரையும், அவருடன் பேச விரும்புவோரையும் நான் தடுக்கவேண்டியிருக்கிறது. ஏனெனில் மகாத்மா காந்தி இன்னும் பல இடங்களுக்குச் செல்லவேண்டி யிருப்பதால் அவருடைய தேகநிலைக்கு யாதொரு கெடுதலும் ஏற்படாதிருக்குமாறு பார்த்துக் கொள்வேனென்ற உறுதியை அவருக்கு நான் சொல்லியிருக்கிறேன். ஆகவே ஜனங்கள் மகாத்மாவுடன் சம்பாஷிப்பதை நான் தடுப்பதாக என்னைப் பலர் கண்டித்த பொழுதிலும், நான் மகாத்மாவிற்குச் செய்யவேண்டிய கடமையே எனக்குப் பெரிது.

* * *

மேற்படியார்:— கதர் இயக்கத்திற்குப் பலர் விரோதமாகப் பிரசாரம் செய்வதாகக் கேட்டு மிக்க வருந்துகின்றேன். வறுமைப் பிணியால் வருந்தும் பல்லாயிரக் கணக்கான ஏழை பிராமணரல்லாதாரின் தரித்திரத்தை நீக்குவதற்குக் கதர்தான் சரியான வழி. இதை அவர்கள் உணர்ந்துவிட்டால் பின்னர் கதருக்கு விரோதமாக ஒன்றும் பேசமாட்டார்கள்.

* * *

கும்பகோணத்தில் மகாத்மா காந்தியைக் கண்டிக்கக்கூடிய வைதிகக் கூட்டத்தில் அக்கிராசனம் வகித்த புரொபஸர் கே. சுந்தர ராமையர் மகாத்மா காந்தியை ஏகவசனத்தில் குறிப்பிட்டாராம். அதன்மீது நடந்த விவாதம்:—

ஸ்ரீமான் எஸ். ஆர். இராஜகோபால செட்டியார்:—அக்கிராசனர் மரியாதை இல்லாமல் எப்படி மகாத்மா காந்தியை 'அவன்' என்று கூப்பிடலாம்? இது படித்தவர்களுக்கு அழகன்று.

புரொபஸர் கே. சுந்தர ராமையர்:— நான் கடவுளைக்கூட 'அவன்' என்றுதான் சொல்லுகிறேன். அதில் ஒரு தவறுமில்லை.

ஸ்ரீமான் செட்டியார்:—அப்படியானால் நான் தங்களை 'மடையன்' என்று அழைக்கிறேன்.

புரொபஸர்:—அவ்வாறு தாங்கள் என்னை அழைப்பது எனக்கு ஒரு கௌரவமாகும். அதற்காகத் தங்களுக்கு மிக்க வந்தனமளிக்கிறேன்.

ஸ்ரீமான் செல்வ ராஜ ஜெயின்:— மகாத்மாவைப் பற்றிச் செய்யும் தூஷணையை யெல்லாம் அஹிம்சா தர்மத்துடன் பொறுமையாகக் கேட்டிருந்து காந்தியின் கொள்கைப்படிநடப்பதாகக்காட்டவேண்டும்.

# சென்னை நகரசபைத் தேர்தல்

சென்ற சனியன்று சென்னை நகரசபையின் நான்கு வட்டங்களுக்குத் தேர்தல் நடைபெற்றது. முடிவு வருமாறு:—

**பார்க்டவுன்**

டாக்டர் யூ. எல். நாராயணராவ் (காங்கிரஸ்) போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

**சூளை**

| | |
|---|---|
| ஸ்ரீமான் சி. முனிசாமி நாயுடு (தொழிலாளர் கட்சி) | 375 |
| ஸ்ரீமான் ராகவேந்திர ராவ் (காங்கிரஸ்) | 334 |

முன்னவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**புரசைவாக்கம்**

| | |
|---|---|
| ஸ்ரீமான் டி. ஆர். கோதண்டராம முதலியார் (ஜஸ்டிஸ்) | 416 |
| டாக்டர் ராம காமத் (காங்கிரஸ்) | 226 |

முன்னவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**வேப்பேரி**

| | |
|---|---|
| ஜனாப் ஷாபி முகமது சாகிப் (காங்கிரஸ்) | 334 |
| ஸ்ரீமான் முனிரத்னம் செட்டி (சுயேச்சை) | 308 |

முன்னவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

மகாத்மா காந்தி பென்னாடம் என்னுமிடத்துக்கு வருவாரென்று முதலில் அறிவிக்கப்பட்டிருந்ததாம். தென்னாப்பிரிக்காவில் மகாத்மாவின்கீழ் வேலைசெய்தவரான ஸ்ரீமான் அமிர்தலிங்கம் பிள்ளை என்பவர் அவ்வூரில் கதர்நிதிக்கு 1000 ரூபா வசூலித்து வைத்திருந்தாராம். மகாத்மாவின் உடல் நிலையை முன்னிட்டு அங்கேபோக வேண்டாமென்று பின்னர் தீர்மானிக்கப்பட்டதாம். மேற்படி ஸ்ரீமான் அமிர்தலிங்கம் பிள்ளை மகாத்மா கூடலூரிலிருந்த அன்று அங்குப்போய் அவரைப்பார்த்துப் பேசமுயன்றும் முடியாதபடியால், சாலையில் மகாத்மாவின் மோட்டார் போய்க்கொண்டிருந்தபோது சில தொண்டர்களுடன் குறுக்கே படுத்துக்கொண்டு மறியல் செய்தாராம். மோட்டார் நின்று மகாத்மா விவரம் விசாரித்தபோது தாம் எழுதிவைத்திருந்த கடிதத்தைக்கொடுத்தாராம். அன்று மாலை அவர் மகாத்மாவைப் பார்க்கச்சென்றபோது "இதுதான் என்னிடம் தாங்கள் தென்னாப்பிரிக்காவில் கற்றுக்கொண்டதா?" என்று அடிகள் வினவினாராம். "தங்களைச் சூழ்ந்திருந்த ஐயங்கார்கள் தங்களைப்பார்க்க இடங்கொடாததால் அப்படிச்செய்யநேர்ந்தது" என்று ஸ்ரீமான் பிள்ளை கூறினாராம். பின்னர் மகாத்மா "தென்னாட்டுச் சுற்றுப்பிரயாண திட்டத்தை ஸ்ரீ ஆச்சாரியாரிடம் ஒப்படைத்திருக்கிறேன். அவர் நிர்ணயிக்கிறபடியேதான் செய்ய வேண்டும். மேலும் எனது தற்போதைய உடல் நிலையில் அதிக தூரம் மோட்டார் பிரயாணம் செய்யமுடியாதிருப்பது குறித்து வருந்துகிறேன்" என்று கூறி அவரை அனுப்பினாராம்.

# எதிரொலி

## வேலூர் மௌனசாமிகள்

"எங் இந்தியா"வில் ஸ்ரீ மகா தேவ தேஸாய் எழுதுவதாவது:—

எங்கள் சுற்றுப்பிரயாணத்தில் சிற்சில சமயங்களில் பெயரும் புகழும் இன்றிச் சுய நலமற்ற மௌனத் தொண்டியற்றி வரும் மனிதர்களைக் காண்பதுண்டு. வேலூரில் இத்தகையவர்களில் ஒருவரைப் பார்த்தோம். அவர் முப்பத்தைந்து வருடத்துக்கு முன்னர் மௌன விரதம் பூண்டவர்; பிரமசாரி. அவர் செல்லுமிடங்களி லெல்லாம் மக்களுக்குத் தொண்டியற்றிக் கொண்டே போகிறார். இந்தப் பக்கங்களில் இளைஞர், முதியோர் எல்லாருக்கும் அவரை நன்கு தெரியும். எல்லாரும் அவரைப் போற்றுகிறார்கள். அவர் பெயரை நான் அறியேன். எனெனில், தம்உலக வாழ்க்கையின் அற்ப விஷயங்களைப்பற்றிய கேள்விகளுக்குப் பதில் எழுத அவர் இணங்குவதில்லை. அவர் தவறாமல் நூல் நூற்று வருகிறார். சென்ற சில வருஷங்களாகக் கதர்த் தொண்டுக்கே தம்மை அர்ப்பணம் செய்திருக்கிறார். கிராம வாசிகள் அவரிடம் அளவற்ற மதிப்பு வைத்திருக்கிறார்கள். ஆற்காட்டில் கட்சிப்பிணக்கு காரணமாக காந்திஜியின் வருகை ஏற்பாடு நன்கு நடைபெறாது என்று அவருக்குத்தகவல் தெரிவிக்கப்பட்டது. "அதைப்பற்றிக் கவலை வேண்டாம்" என்று அவர் சாடையினால் அறிவித்துவிட்டு அன்றிரவே அவ்வூர்சென்று சமாதானம் செய்து வைத்து விட்டார். இவரைப்போன்ற மௌன வீரர்களைப் பார்க்கும்போது, உண்மையான தொண்டு செய்ய வேண்டுமானால் ரயில், தபால், தந்தி நாகரிகம் பரவாத உள்நாடுகளுக்குச்சென்று, அங்கேயே தங்கி வெளிக்குத் தெரியாமல் வேலைசெய்ய வேண்டுமென எண்ணம் உண்டாகிறது.

## ஐ. சி. எஸ். ஆயினும் இந்தியர் இந்தியர் தான்!

"அமிருதபஜார் பத்திரிகை" தன் தலையங்கமொன்றில் பின்வருமாறு எழுதுகிறது:—

ஸ்ரீ கிருபாலனி என்பவர் ராஜஷாஹி உதவி மாஜிஸ்ட்ரேட்டு ஆவர். அவர் ஐ. சி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர். பெரிய குடும்பத்தில் பிறந்தவர். அவர் சகோதரர்களில் மூவர் ஐ. சி. எஸ்.காரர்கள். சாதாரண உதவி மாஜிஸ்ட்ரேட்டான கிருபாலனி உயரிய 'தோரணை'யில் வாழ்க்கை நடத்தியது அங்குள்ள மற்ற ஐரோப்பியர்களின் கண்ணை உறுத்திற்று. அவர் ஐ. சி. எஸ். காரரானபடியால் ஐரோப்பிய கிளப்பில் அங்கத்தவர். கிளப்பைச் சேர்ந்த மற்ற ஐரோப்பியர்கள் அவர் ஐ. சி. எஸ். காரராயினும் இந்தியர்தானென்பதை நினைவூட்டப் பல முறை முயன்றார்கள். ஸ்ரீ கிருபாலனி அவர்களை அலட்சியம் செய்து அவர்களுடன் பேசுவதையே நிறுத்தி விட்டார். இதனால் அவர்களின் கோபம் அதிகமாயிற்று. ஜூலை" 17உ இரவு 11 மணிக்கு ஸ்ரீ கிருபாலனி கிளப்பிலிருந்து வெளியேவந்தபோது அவருடைய சைகிள் டயர் பொத்தலாக்கப்பட்டிருப்பதைக் கண்டார். எனவே சைகிளைக் கையால் தள்ளிக் கொண்டு நடந்து சென்றார். அவருக்குப் பின்னால் மேற்சொன்ன துரைமார்கள் ஒரு மோட்டாரில் ஏறிக் கொண்டுவந்தார்கள். அவர் விலகினார். ஆயினும் அவர் மீது மோட்டாரைச் செலுத்த முயற்சி செய்யப் பட்டது. அவர் ஆயாசமடைந்து "உங்கள் நோக்கமென்ன!" என்று கேட்டார். "உமக்கு நன்னடக்கை கற்பிக்க விரும்புகிறோம்" என்று பதில் வந்தது. உடனே துரைமார்கள் இறங்கி அவரை அடித்து அருகிலிருந்த குளத்தில் தள்ளினார்கள். குளத்தில் ஜலம் அதிகமில்லாததால் ஸ்ரீ கிருபாலனி தப்பிப் பிழைத்தார். அந்நிலையில் ஸ்ரீகிருபாலனி ஜில்லா மாஜிஸ்ட்ரேட் மிஸ்டர் லார்க்கின்னிடம் சென்று புகார் செய்தார். ஜில்லா மாஜிஸ்ட்ரேட் விசாரிப்பதாகச் சொன்னார். இரண்டு வாரங்கழித்து மறுபடியும் ஸ்ரீ கிருபாலனி அவரிடம் சென்றபோது, அன்றிரவு ஸ்ரீ கிருபாலனி குடிமயக்கத்திலிருந்ததாகவும், அவர் தம்மை அடித்தவர்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்றும் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் சொன்னார். ஸ்ரீ கிருபாலனி இந்த அவதூறைக் கேட்டுத் தடுக்கிட்டு உடனே கவர்னருக்கு பகிரங்க விசாரணை நடத்தும்படி விண்ணப்பித்துக் கொண்டார். இதுவரை அதன் கதி என்னவாயிற்றென்று தெரியவில்லை.... கவர்னர் இவ்விஷயத்தைத் தீர விசாரிப்பாரென நம்புகிறோம். ஸ்ரீ கிருபாலனியை நாம் ஒன்று கேட்டுக்கொள்வோம். அவர் இறுதிவரை போராடியே தீரவேண்டும். உயர் நிலையிலுள்ள இந்தியர்கள் தங்கள் நியாயமான கட்சிக்குப் போராட மறுப்பதால்தான் அநீதிகளையும், அவமானங்களையும் நாம் சகித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது ஸ்ரீ கிருபாலனி மற்றும் பலரைப்போல் உணவுக்குப் பிறர் கையை எதிர்பார்த்தவரல்லர். எனவே, அவர் உத்தியோகம் போனாலும் போகட்டுமென்று போராடவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

## ஹிந்துமதந்தழுவிய ஐரோப்பியர்

"இண்டியன் நேஷனல் ஹெரால்ட்" பத்திரிகையிலிருந்து பின்வரும் விவரம் எடுக்கப்படுகிறது:—

சென்ற வாரத்தில் பம்பாயில் மிஸ்டர் ஹென்ரி டி விட்மான் என்னும் ஐரிஷ்காரர் ஆரியசமாஜத்தாரால் ஹிந்துமதத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டு, பண்டித சத்தியானந்தர் என்று நாமகரணமும் செய்யப்பட்டார். மிஸ்டர் விட்மான், வட ஆற்காடு ஜில்லா கலெக்டராயிருந்த மிஸ்டர் ஹென்ரி லீமான் (ஐ. சி. எஸ்) என்பவரின் புதல்வர். அவர் ஹிந்து மதந் தழுவிய அன்று அவருக்கு 33 வயது ஆயிற்று. சென்ற ஐந்து வருஷகாலமாக அவர் ஜி. ஐ. பி., பி. பி. சி. ஐ. ரயில்வேக்களில் எஞ்ஜினியராக உத்தியோகம் பார்த்துவந்தார். இப்போது அவர் வேலையை விட்டுவிட்டார். "ஐரோப்பியர்களின் கீழ் ஊழியம் செய்வதை வெறுப்பதினாலேயே" வேலையை விட்டதாக அவர் சொல்கிறார். அவர் இனி பம்பாயில் சொந்தமாக என்ஜினியர் தொழில் செய்யப் போகிறாராம்.

"சத்தி"க்கிரியை ஆனதும் அவர் "ஐரோப்பிய நாகரிகமும் அறவொழுக்கமும்" என்பது பற்றி ஒரு பிரசங்கம் செய்தார். அப்பிரசங்கத்தில்தற்காலம் இந்தியாவுக்கு வரும் ஐரோப்பியர்களைப்பற்றி அவர் கூறியதாவது:— "இக்காலத்தில் இந்தியாவுக்கு வரும் ஆங்கிலேயரில் மிகச் சிலரே இந்தியாவினிடம் அநுதாபத்துடன் வருகிறார்கள். பொதுவாக அவர்கள் அரைப் பட்டினிகிடந்த மனிதர்கள். தாங்கள் சுகமனுபவிக்கவும் தங்கள் சட்டைப் பைகளை நிரப்பிக் கொள்ளவுமே அவர்கள் வருகிறார்கள்."

மிஸ்மேயோவின் புத்தகத்தைக் குறிப்பிட்டு அவர் சொன்னதாவது:— "ஐரோப்பிய ஸ்திரீகளின் ஒழுக்க நிலை எல்லாருக்கும் நன்கு தெரிந்த விஷயமானபடியால் அதைப் பற்றி எதுவும் சொல்லாமல் விடுவதே விசேஷம்."

ஐரோப்பியக்கல்வியும், ஐரோப்பிய நாகரிகமும் மக்களை உலகாயதர்களாகவும், சலன புத்தியுள்ளவர்களாகவும் ஆக்கி விடுமென்றும், ஆதலின் அவற்றை மேற்கொள்ளவேண்டாமென்றும் அவர் இந்தியர்களுக்கு, சிறப்பாக இந்திய ஸ்திரீகளுக்கு எச்சரிக்கை செய்தார்.

"ஒரு சாதியின் வருங்கால முன்னேற்றம் தாய்மார்களையே பொறுத்தது ஐரோப்பாவில் தற்போது உண்மைத்தாய்மார்களைக் காணல் அரிது. இதற்குக்காரணம் உலகாயத மனப்பான்மை மிகுந்து வருவதே" என்று அவர் உரைத்தார். தாம் ஹிந்து மதந்தழுவியது குறித்து, தம்மை வேறு யாரும் அம்மதத்தில் சேர்க்கவில்லையென்றும், தம்முடைய சொந்த விருப்பத்தினால் ஹிந்து மதத்தின் மேன்மையை உணர்ந்து அதைத் தழுவுவதாகவும் கூறினார்.

முடிவில் அவர் சொன்னதாவது:— "சென்ற சில வருஷங்களாக நான் சத்தியத் தேட்டத்தில் ஈடுபட்டிருந்தேன். இக வாழ்வையும், மறு உலக வாழ்க்கையையும் பற்றிய எல்லாப்பிரச்னைகளையும் திருப்திகரமாகத் தீர்த்து வைக்கும் கொள்கைகளை ஹிந்து மதத்தில் கண்டேன். என்னுடைய தந்தை 57 வருஷகாலம் இந்தியாவில் வாழ்ந்தார். அவர் ஸம்ஸ்கிருத பாஷையை நன்கு கற்றவர். ஹிந்து மதத்தில் அவருக்கு அதிக பற்றுண்டு. நான் இப்போது ஹிந்துமதத்தைத் தழுவுவதற்கு என்தந்தை ஒருவகையில் காரணமானவர் என்று சொல்லலாம்."

மிஸ்டர் விட்மான் பிறந்ததிலிருந்து சுத்த சைவ உணவே அருந்திவருபவரென ஸ்ரீகல்யாண் தாஸ் தேஸாய் தெரிவித்தார்.







## சமய குரவர் நால்வரது பாட்டின் இயல்பு

—(o)—

திருவாளர் - வெ. லெ. பாலசுப்பிரமணியன் பி. ஏ. எழுதுவது

### VI

#### மாணிக்கவாசகர்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

"வான்கெட்டுமாருத மாய்ந்து
அழல்நீர் மண்கெடினும்
தான் கெட்டலின்றிச்சலிப்
பறியாத்தன்மையனுக்கே"

இவர்கள் ஆட்பட்டார்கள். இவ்வாறு ஒருயிர் தன்னிலைமை யின்னதெனவுணர்ந்து, இறைவனைப் போய்ச் சேர்தல் வேண்டுமென்னும் பேரவாவினால் உந்தப்பட்டு, அவனது திருவடியிணைகளே புணையென்று கருதி, தன்னையும், தன்பெயரையும், தனக்குரிய தென இதுகாறும் கருதி வந்தவைகளையும் அறவே மறந்து நிற்கும் மாணிக்க வாசகரது மன நிலையை,

"முன்னையவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங்கேட்டாள்,
பின்னையவனுடைய ஆரூர் கேட்டாள்
பேர்த்து மவனுக்கே பிச்சியானாள், அன்னை
யையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கைதலைவன் தாளே"

என்னும் அப்பரது திருத்தாண்டகம் நன்கு படம் பிடித்தாற்போற்காட்டுகின்றது. திருப் பெருந்துறையில் குருந்த மர நீழலில் செம் மேனியோடு விளங்கிய எம்பெருமான் தம்மடியார் குழாத்தின் நாப்பண், கையிற் சிவஞான போதம் தாங்கி தென்றிசைக் கடவுளாரது திருக் கோலந் தாங்கித் தமக்கு அருள்புரிந்ததையே திருவாசக முழுதும் அவர் பாடியிருக்கக் காண்கிறோம். அக்கணமே, அடிகள் தம்வயமிழந்து, தம்மையாட் கொண்டார் வயப்பட்டார். அவருக்குச் சிவாகமவிதிப்படி சிவ தீக்ஷை செய்யப்பட்டது. மாணிக்க வாசகனென்னும் தீக்ஷா நாமமும் இடப்பட்டது. சிவ ஞான போதமும் உபதேசிக்கப்பட்டது. இதனையே அடிகள்

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா யார்கொலோசதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீபெற்ற தொன்றென்பால்
சிந்தையே கோயில்கொண்ட எம்பெருமான்
திருப்பெருந்துறை யுறை சிவனே
எந்தையே யீசாவுடலிடங் கொண்டாய்
யானிதற்கிலனோர் கைம்மாறே"

எனவியந்துபாடினார். ஆனால் மாணிக்கவாசகரைக் கொண்டு இன்னுஞ் சில காரியங்கள் உலகத்தில் நிகழ்த்த வேண்டியிருப்பதால், இறைவர் அடிகளை ஆண்டே விட்டுத்தம் மடியாரோடும் மறைந்தருளினார். இதனை அடிகள் ஆற்றாது

"செழுக்கமலத் திரளனநின்
சேவடி சேர்ந்தமைந்த
பழுத்த மனத்தடியருடன்
போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப்புன் குரம்பைப்
பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்தடியேன்
உடையாய் உன்னடைக்கலமே."

எனத்தம்மை அடைக்கலமாக ஏற்றுக்கொள்ளும்படி இறைஞ்சிக் கதறுகின்றார். இவ்வாறு இறைவன் ஆட்கொண்டு மறைந்த காலத்தில், மாணிக்கவாசகரின் உள்ளப் பாங்கினை முற்றும் அறிந்தவர் போன்று, பரஞ்சோதி முனிவர்,

"வஞ்சவினைக் கொள்கலமாம் உடலைத் தீவாய் மடுக்கிலேன் வரைபுரண்டு மாய்ப்பேனல்லேன், நஞ்சொழுகு வாளாலுங் குறைப்பேனல்லேன் நாதனே யதவு நினதுடைமை யென்றே, அஞ்சினேன் தானேயு மழியாதாவி ஐயனே நினைப்பிரிந்தும் ஆற்றகில்லேன், என்செய்கேன் எந்தாயோ எந்தாயோ வென்று இரங்கினார் புரண்டழுதார் இனைய சொல்வார்"

"அறியனும் ஒரு பிறவிக்குருடன் கையில் வந்தபெரு விலைமணிபோல் மழலைதேருச், சிறுவனும் ஒருமதலை கையிற்கொண்ட செம்பொன் மணிவள்ளம்போல் தேவர்யார்க்கும், அறிவரியாய்ச் சிறியேனை யெளிவந்தாண்ட அருமை யறியேன் துன்பத்தழுவத் தாழப், பிரிவறியா அன்பரொடு மகன்றாய்க் கல்லாப் பேதையேன் பிழையலதென் பிரானு வென்னே"

எனத் தமது திருவிளையாடற் புராணத்துள் கூறியிருத்தல் காண்க.

திருவாசகத்தின் இனிமையும், பெருமையும் யாவராலும் அளப்பரிது. இவ்விழுமிய நூலினை யாம் பயிலுங்கால், அது பயக்கும் பேரின்ப மகிழ்ச்சி உள்ளத்துணர்வான் அறியக் கிடந்த வொன்றே யன்றி, அது தரும் இன்பம் இப்பெற்றித்தென பிறர்க்கெடுத்துரைக்கவும், எட்டி யெழுதவும் எம்மால் முடியாது.

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத்து ஆனந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவாசகமென்னும் தேன்"

"திருவாசகத்தி னுருகார்
ஒருவாசகத்தினு முருகார்"

"திருவாசகம் என்புருக்கிப்பாட்டு"

என்னும் மேற்போந்த வெண்பாட்டும், பழமொழிகளும், திருவாசகத்தின் இனிமையினையும், அது படிப்பவர் உள்ளத்தினைக் கனியச் செய்யும் நீர்மையினையும் நன்கு விளக்கும். தாம் சிவபெருமானது அருள் பெற்று, அதனால் தாமெய்தும் பேரின்ப வெள்ளப் புணரியின் திளைத்த காலத்துப் பாடிய திருவாசகம், உண்மையிலேயே என்பை யுருக்குந் தன்மையன; மற்றும் உள்ளொளியைப் பெருக்குந் தன்மையன என்னு முண்மைக்கு,

"பானினைந் தூட்டும் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமேசிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்
தெங்கெழுந்தருளுவ தினியே" [தேன்

என்னும் மணிவாசகனாரது திருவாசகப் பாட்டே சான்று பகரும். தம் பொருட்டு இறைவன் எளிதினிரங்கி மானிட வுருவந் தாங்கி குரு பரனாகத் தம்மை யாட்கொண்டதையும், பின்னர் நரிகளைப் பரியாக்கினமை முதலிய திருவிளையாடல்களை அடிகள் தம்பாக்களில் அமைத்துக் கூறுதலை,

"இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென்
னென் புருக்கி
கரும்புதருசுவையெனக்குக் காட்டினை
யுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலகுசடை யுடையானே
நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கிய வாறன்றே
யுன்பேருளே"

என வருஉம் பாக்கள் வலியுறுத்தல் காண்க. இனித் திருவாசகத்தைப் பாடக்கேட்டாலும், பயின்றாலும் இனிமை பயந்து நம்மைக்குழையச் செய்யும் பெற்றியையும், அவ்வாறின்றி, வடமொழிக் கண்ணதாயுள்ள வேதங்களைப் பொருளறியாமற் பாடக்கேட்டால், அங்ஙனம் யாம் இன்புறுதலில்லை யென்பதை நன்குயறிந்தே,

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரையெனும் ஆரணமொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்கு வீராயின்
வேத மோதில் விழிநீர் பெருக்கி
நெஞ்சக நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசக மிங்கொரு கால் ஓதில்
கருங்கன் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணல் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்தி
அன்பராகுநரன்றி
மன்பதை யுலகில் மற்றையர் இலரே"

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் தம் நால்வர் நான்மணி மாலையிலும்,

"மனங் கரைத்து மலங்கெடுக்கும்
வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடை யென்றுரு வேற்றிக்
கண்மூடிக் கதறுவரோ"

என ஆசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் தம் மனோன்மணீயத்திலுங் கூறியிருத்தல் காண்க.

இத்தகைய மற்ற நூற்களிற் காணப்பெறாத இனிமையும், மனமுருக்கும் தன்மையும் திருவாசகத்திற்கு யாண்டிருந்து வந்ததென ஐயம் நிகழுமாயின், அதற்குக் காரணம், மணிவாசகப் பெருமான் இறைவனை வழிபட்ட நெறியே யாகுமென்று விடை யிறுக்க. இவரது நெறி சன்மார்க்கமென்று முன்பே கூறினேம். மற்றும், இவர் தம் பாக்கள் பெரும்பான்மையனவும், தம்மைக் காதலியாகவும், இறைவனைக் காதலனாகவும் அமைத்துப்பாடும் அகப் பொருட்டுறையைத் தழீஇ யனவென்றும், இதற்குத் திருக்கோவையாரே பேரிலக்கியமெனவுங் கூறினேம். ஒரு செல்வ மகன், தன் அடிமை, சேய்மையில் நின்று கை கட்டி, வாய்பொத்தி, அச்சத்தோடு தன்னுடன் பேசுதலையும், தன் அருந்தவச் சிறுவன் தன்னோடு விளையாடிப் பேசுங் குதலைச் சொற்களையும், உணர்ச்

சியானொத்த தன்தோழன் தன்னோடு ஒருங்கமர்ந்து வசைபாடி, நகையாடிப் பேசுதலையும், ஒவ்வோர் கால் விரும்புவானாயினும், பருவத்தானும், குணத்தானும், நலத்தானும், கல்வியானும் தன்னோடொத்த இளமைக் கட்டழகுவாய்ந்த தன்னருமைக் காதலி, தன் மடிமேலமர்ந்து, முகவாயை வருடி, கட்டியணைத்து முத்தமிட்டுப் பேசும் காதற் சொற்களை யாண்டும் எங்ஙனும் எவ்வாற்றானும் விழைவானென்க. அஃது அவனுக்குப் பேரின்பம் பயப்பதோர் ஊற்றாயிருக்கின்றது. அவ்விருவரும் ஒருயிரும், ஈருடலுமாயினர். தமக்குள் ஒருவர்க்குத் தெரியாது ஒருவர் மறைத்து வைக்கும் இரகசியமே அவரிடத்து இல்லை. இத்தகைய நலம் வாய்ந்த இருவருள், காதலி தன் காதலனோடு இனிமை பயப்பப் பேசுதலைக் கேட்கவே யாமும் விழைகின்றோம். அது போன்றே, தாத மார்க்கம், புத்திரமார்க்கம், சகமார்க்கம் என்பவற்றை முறையே தழீஇய அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்பவர் பாக்களில் திருவாசகத்திற் காணப்பெறாத சிற்சில சிறப்புக்களும், நயங்களும் யாம் காணப்பெற்று, அவற்றைப் படிக்கவும், கேட்கவும் அவாவுகின்றோமாயினும், சன்மார்க்கத்தையே தமக்குரிய நெறியாகக் கடைப்பிடித்த மணிவாசகப் பெருமானது திருவாசகத்தைப் பயிலுந்தோறும் யாம் பெறும் இன்பம், யாங்ஙனும் பெறுவதில்லையென உறுதியாகக் கொள்க. இக்கருத்தினையே

"சேமமிகுந் திருவாத
 ஆர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீயுரைத்த
 வாசகத்தை யெண்ணுதொறும்
காமமிகு காதலன்றன்
 கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையா
 ளின்பினுமின் பெய்துவதே"

என இராமலிங்க அடிகளும், தம்முடைய ஆளுடைய அடிகள் அருண் மாலையினும் வலியுறுத்துகின்றார். திருவருட்பாவின் இப்பகுதியிலுள்ள பாட்டுக்களனைத்தும் நெட்டுருச் செய்யத்தக்கன. மற்றமூவரைப்பற்றிப் பாடும்போதடையாத இன்பம், மாணிக்க வாசகப் பெருமானைப் பாடும்போது மட்டும் இராமலிங்க அடிகள் அடைந்தாரென்பதை ஆளுடைய அடிகள் அருண் மாலையிலுள்ள பத்துப் பாக்களையும், மற்றப் பாக்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் அறிவோம். ஆதலால் இன்னும் இரண்டு தருதும்.

"வான்கலந்த மாணிக்க
 வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்
 நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து
 செழுங்கனித் தீஞ்சுவை கலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து
 உவட்டாம லினிப்பதுவே"

"வாட்டமிலா மாணிக்க
 வாசக நின்வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த
 கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா
 விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு
 நானடைதல் வியப்பன்றே"

கல்வியென்னும் பெரும் புணையினால் பலவித உயர்ந்த பேறுகளெய்தலாம், கல்லாதார் அறிய மாட்டாத பலவித உண்மைகளை யறிந்து கொள்ளலாம் என்று, தம்சமய மரபு நூற்களையன்றிப் பிற நூற்களையும் ஆவலோடு படித்தவர்கள் நால்வரில் அப்பரும் மாணிக்கவாசகரும் ஆவர் என்று முன்பே கூறினேம். இடைவிடாத கல்விப்பயிற்சி நம் திருநாவுக்கரசரை எத்துறையில் விட்டது, அவர் அதினின்றும் யாங்ஙனம் வெளிப் போந்தார் என்பதையும் சற்று முன்புகருதினேம். மாணிக்க வாசகரது முப்பத்திரண்டியாண்டினுள் இளமைப் பருவம் கடப்பதற்கு முன்னரே தம்மரபுக்கு உரிய வேதசிவாகம முதலியவற்றையும் பிற நூற்களையும் கற்று வல்லாராயினர். இவர்தம் கல்விப்பெருக்கையும், குணச்சீர்மையினையும் கேட்டு, அப்போது மதுரையை அரசாண்ட பாண்டியமன்னன் அவரை வரவேற்று, முதன் மந்திரியாக்கி, அவர்க்கு, யார்க்கும் கிடைத்தற் கரிதாகிய "தென்னவன் பிரமராயன்" என்னும் உயரிய பட்டத்தினையும் அளித்தான். நம் அடிகளும் அரசனுக்கு இனியராயும், சிவ வழிபாடு, அடியார் சிந்தனை இவைகளிற் சிறந்தவராயும், பெருஞ் செல்வத் தோடு வாழ்ந்திருக்கையில், நீரிற் குமிழிபோன்ற இம்மண்ணுலக வின்பத்தையும் நிலைப்பது போற்காட்டி மறுபடியும் அழிந்தொழிதற் பாலதாய அவ்விண்ணுலக வின்பத்தையும் அறவே வெறுத்தார். ஆதலால் பேரின்ப வீட்டைத்தருதற்கு ஏதுவாய தத்துவஞானத்தை யுபதேசிக்கவல்ல பரமாசாரியரைத் தேடி அவரிடம் தாம் அடைக்கலம் புகவேண்டும் என்னும் வேட்கை மேலிட்டிருந்தது.

ஈண்டு, தம் வாழ்க்கையின் முதற்படிகளில், அப்பர் கற்றதனாலாய பயனெய்தியதற்கும், மாணிக்கவாசகர் அஃதெய்திய தற்கும் வேற்றுமையுண்டு. முன்பு கூறியபடியே அப்பர் தம் அறிவையும், அளவை நூல்களையுமே விழுமிய உண்மைகளைக் காண்டற்குத் துணையாமென நம்பி, சைவ சமயம் தலைசிறந்த தென்பதையும், கொல்லாமை அதன் அடிப்படை யுணர்ச்சியாமென்பதையும் அறியாது, சமண சமயம் புகுந்து இழுக்கினார். ஆனால் நம் மாணிக்கவாசக அடிகள், முதற்கண் அப்பரைப் போன்று தம் அறிவிலும், நூற்களிலும் அளவிறந்த நம்பிக்கை கொண்டிருந்தரேனும், அவர்க்கும் பற்பலஐயங்கள் நேர்ந்தனவேனும், அவைகட்கெல்லாம் இடங் கொடாமல், "காடுங்கரையும் மனக்குரங்கு கால்விட்டோட" விடாமல் தம் மனவலியைப் புத்தியினால் இழுத்துப் பிடித்துக் கொண்டேவந்தார். இவர்க்குத் தெய்வமென்பதோர் சித்த முண்டாகியும், நாத்திகம், விரதத்தையே பரமாகப் பேசும் ஆரியப் பார்ப்பன சமயம், மாயாவாதம், உலோகாயதம் என்னும் தம்மைச் சூழ்ந்துள்ள பற்பல மதங்களிலும் உண்மையைக் காணலாமென்னும் முயற்சி இருவர்க்கும் உண்டாயது. ஆனால் நற்காலமாக இவர் தலை தடுமாறாது, வாது செய்வதற்கு இடந்தந்திலராய், கொடிதும் பேதையுங் கொண்டது விடாதெனும் படியேயாகி, தப்பாமே தாம் பிடித்ததைச் சலியாது முடிவு காறும் பிடித்துக்கொண்டிருந்தார். கல்வியையும், நம் சிற்றறிவையும் மட்டும் நம்புவதால் வருங் கேட்டை, அப்பர் அக்கேடுகளை யடைந்தபிறகே யுணர, நம் அடிகள் மிக்க இளமைப் பருவத்திலேயே அவைகளை யுணர்ந்து விட்டார். உடனே தாம் கற்பதை நிறுத்திப்போட்டார்.

"கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்"

என்று போற்றித் திருவகவலிலுங் கூறுகின்றார்.

"உற்றாரை யான்வேண்டேன்
 ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன்
 கற்பனவு மினியமையும்
குற்றாலத் தமர்ந்துறையும்
 கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்
 கசிந்துருக வேண்டுவனே"

என்னும் பாட்டில், "கற்பனவு மினியமையும்" என்று நம் அடிகள் கூறும் மனத்தெளிவை, எம் அன்பர்களே, நீவிரே சிந்தித்துப் பாருங்கள். அவர் எவ்வளவு தான் கற்றாரோ தெரியவில்லை; ஒருவேளை அவர் கல்வியைக் கரைகண்டிருக்கலாம். அத்தகையோருக்கே கல்வி பயன்படவில்லையானால், எம்போல்வார் கற்றல் என்ன பயன் எய்துதற்கு?

இனி, இவர் முத்தி யடைந்தமையைக் குறித்துச் சிறிது சொல்லி நிறுத்துவாம். மற்ற மூவரினும் நம் மாணிக்கவாசகரே, ஆகப்பெரிய முத்தியினை யடைந்தார் என்பது சைவசமயிகளுட் பரந்திருக்கும் மாபான கொள்கை. இவரை யறிவாற் சிவனே யென்பர் சைவர்கள். ஈண்டு அறிவென்பது அனுபவ அறிவு. அவ்வனுபவமும் பேரின்ப முத்தி யனுபவம் என்றுணர்க. இதன் பொருட்டே, ஆண்டு தோறும் மார்கழித் திங்களில், திருவாதிரையன்று, நடராஜமூர்த்தி மட்டுமே வருவதல்லாமல், அதற்கு முன் ஒன்பது நாட்களில் வருவதுபோல், மாணிக்கவாசகப் பெருமானும் அன்று வீதி வலம் வருவதில்லை. என்னை? தாம் வேறு, தாம் கலந்த இறைவர் வேறு என்னுங் கூறுபாடின்றி, அவ்வளவு அணுக்கராய் இறைவரிற் றாம் இரண்டறக்கலந்து விட்டமையான் என்க. இன்றும், திருப்பெருந்துறை முதலிய தலங்களிலெல்லாம், மார்கழித்திங்களில், மணிவாசகருக்குத் திருவிழா நடைபெறும்போது, சிவபெருமானுக்கு உளவாய வாகனம் முதலிய பெருமைகளெல்லாம் நம் அடிகளாருக்கும் உண்டென்பது யாம் மேற் கூறியதை வலியுறுத்தும். நாம் என் இவ்வாறு அகச்சான்றுகளிருக்க, புறச்சான்றுகளைக்கொண்டு, அவர் தம் முத்தி யின்னவாறென அறிய முயலவேண்டும். திருவாசகம் எழுதிய பிறகு, அதற்கு உரை செப்புமாறு பலர் நம் அடிகளை யிறைஞ்ச, அவர் அவர்களெல்லோரையும் ஆடும் பெருமான் திருச்சபையிற் கொணர்ந்து தாம் எழுதிய நூலுக்கு, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னுமைந் தொழில்களையும் அங்கமாகக் கொண்டு ஆடல் புரியும் குஞ்சித பாதத்தெம் மிறைவனே உரை யென்று கூறி ஆங்குத் தோன்றிய பேரொளியிற் கலந்தனர். இவ்வொன்றே நமக்குப் போதாதோ? இதனை வியந்தே, துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளும்,

"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே
வாசகம் அதற்கு வாச்சியம்
...............வேய்த் தோளிடத் தவனே"

என்றும்,

"செய்யவார் சடைத் தெய்வ சிகாமணி
 பாதம் போற்றும் வாதவூ ரன்ப
 பாவெனப் படுவ துன் பாட்டுப்
 பூவெனப் படுவது பொறிவாழ் பூவே"

எனவும் தமது நால்வர் நான்மணி மாலையிற் பாடியிருத்தல் காண்க. இனியும் வாதவூரடிகளைப் பற்றி எழுத எம்மனம் விழைந்திலது, அவர் பெருந்தகைமையினை யாம் எம் சிற்றறிவுகொண்டு எவ்விதம் அளந்தறியத் துணிவேம். அதற்குக் காஞ்சிப் புராணம் பாடிய சிவஞான சுவாமிகளே தகுதியுடையவர். ஆதலால் அவர் பாட்டொன்றைத் தருதும்.

"பெருந்துறையிற் சிவ பெருமா னருளுந்த
 பெருங்கருணைப் பெற்றி நோக்கி[யு]ம்
கரைந்து கரைந்திரு கண்ணீர் மழைவாரத்
 துரியநிலை கடந்து போந்து
இருந்து பெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
 வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்து
இருந் தருளும் பெருங்கீர்த்தி வாதவூர்
 அடிகளடி யிணைகள் போற்றி"

(தொடரும்)

# திராவிட வேதத்திரட்டு

என்னும்

## பன்னிரு திருமுறைத் திரட்டு

### திருப்புகழ், திருவகுப்புத் திரட்டுடன்

மூன்றும் பதிப்பு

சிவரஹஸ்யப் பதிப்பாசிரியர் க. சதாசிவ செட்டியார், பி. ஏ., அவர்களால் அடங்கன் முறையிலுள்ள எல்லா க்ஷேத்திரப் பதிகங்களினின்றும் திரட்டப்பட்டது. க்ஷேத்திர வரலாறு, போகும் வழி, ரயில்வே ஸ்டேஷன் முதலியனவும் குறிக்கப்பட்டுள்ளன. உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது. டெம்மி 8-பக்க அளவில் சுமார் 600-பக்கங்களுடையது. உயர்ந்த காலிகோ கட்டடம் பொன்கிலிட் எழுத்துக்களுடன். விலை ரூ. 3-8-0.

விலாசம்:— முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## ஆனந்த போதினி

தமிழ் நாட்டில் பழமையும் புதுமையும் வாய்ந்ததும், 20,000 - சந்தாதாரர்களுடையதுமான மாதப்பத்திரிகை இது ஒன்றே. இதற்கு 12-வது வருடம் இப்பொழுது நடக்கிறது. இதுவரையில் சந்தாதாரராய்ச் சேராதவர்கள் இப்பொழுதே சேருங்கள். பிரதி மாதமும் 48-பக்கங்களுள்ள விஷயங்களுடன் இது வெளிவரும்.

வருடச் சந்தா:—இந்தியா, பர்மா, சிலோன் முதலியவற்றினுல் தபாற் செலவு உள்பட ரூ. 1. வெளி நாடுகளுக்கு ரூ. 1-4-0 மாதிரிக் காப்பி இனும்.

ஆனந்த போதினி ஆபீஸ், மதராஸ்

---

உயர்ந்த இலை!
குறைந்த விலை!!

## சிவபுரி - - - புகையிலை

உலகு புகழ்வது எது? உற்சாகத்தின் ஊற்று எது? மணம் மிகுந்தது எது? குணம் சிறந்தது எது? சிதம்பரத்திற்கு அடுத்த சிவபுரி புகையிலையே! தேவைக் கெழுதுங்கள்! ஒரு முறை பரிக்ஷித்தால் உண்மை விளங்கும்.

கத்தை ஒன்றுக்கு
40 இலைகள் கொண்டது.

| | | | |
|---|---|---|---|
| 1 நெ. கத்தை | விலை | ரூபா | 5-0 |
| 2 நெ. | ,, | ,, | 4-4 |
| 3 நெ. | ,, | ,, | 3-12 |
| 4 நெ. | ,, | ,, | 3-0 |

வி. பி. தபால் பாக்கிங் சார்ஜு வேறு.

வி.கே. எஸ். ஐயர் & கோ,
புகையிலை - வியாபாரம், சிதம்பரம்.

---

## ஒரே ரூபாய்

வாசனைகளிற் சிறந்தது எது?

பிரெஞ்சு செண்டுகளே!

ஜா... ...வில்லா, ரோஸ்
...லை ரூபா 2.
...ல ரூபா 1.
... ரூபா 1—0—0
...ரத்தியேகம்.
...கு எழுதவும்.
...ண்டு கோ.
... புதுச்சேரி

---

## ஆனந்த ஆங்கில பாஷா போதினி

[மூன்றும் பதிப்பு]

சுமார் 1,00,000 ஜனங்களுக்கு எளிதில்
இங்கிலீஷ் ஞானத்தை உண்டாக்கியிருப்பது
800-பக்கமுள்ள அழகிய முழு கலிகோ பைண்டுள்ளது
16-ஆப்டோன் படங்கள் உள்ளது

[உயர்தர ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்தர முதலியார், எம். ஏ., எல். டி. அவர்களால் செய்யப்பட்ட அரிய பெரிய திருத்தங்களோடு கூடியது. இப்பதிப்பில் ஒரு ரூபா முதல் பத்தாயிரம் ரூபா வரையில் உள்ள சம்பளத் திட்டங்களுக்கு ஒரு நாளுக்கு இவ்வளவு சம்பளம் என்று கண்டுபிடிக்கும் தினசரிச் சம்பளப்பட்டிக் கணக்கும், தொகைகளுக்கும் நாள்களுக்கும் தகுந்தபடி வட்டித் திட்டம் சுலபமாகக் கண்டுபிடிக்கும் விளக்கமான வட்டிக் கணக்கும், தேசங்களில் ஒவ்வொரு இடத்திலும் ஏற்படும் காலபேதம் - மணிவித்தியாச விவரம், (அதாவது சென்னையில் இத்தனை மணிக்கு பம்பாய், சிலோன், லண்டன், அமெரிக்கா முதலிய இடங்களில் இத்தனை இத்தனை மணி யிருக்குமென்னும் விவரமும்) அன்னிய தேசத்து நாணயங்களும், அவற்றிற்குச் சரியான இங்கிலீஷ் நாணய மதிப்பும் நூதனமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.]

TRADE MARK

விலை ரூபா 2 தான்

ஆனந்தபோதினிச் சந்தாதாரர்களுக்கு
31-10-27 வரை விலை ரூ. 1-4-0

இது இங்கிலீஷ் பாஷையை எவர்க்கும் எளிதில் போதிக்கும் அரிய நூல். இதுவரை வெளி வராத நூதன பாட முறைகளுடன் வெளியிடப்பட்டிருக்கிறது. இதனைப் படிப்பவர் எந்த ஆசிரியருடைய உதவியுமின்றிச் சில தினங்களில் ஆங்கில பாஷையில் தேர்ச்சியடைந்து நன்றாகப் பேசவும், படிக்கவும், எழுதவும் தெரிந்துகொள்ளலாம். பகட்டுரைகளுடன் வெளிவந்துலாவும் தப்புப் புத்தகங்களை வாங்கி ஏமாந்து போகாதீர்கள். சரியான பாடமுறையுள்ள எமது புத்தகத்தைப் பார்த்துவாங்குவீர்களாக.

விலாசம்:— ஆனந்தபோதினி ஆபீஸ்,
தபாற்பெட்டி நெ. 167, மதராஸ்.

---

# FEDERATED INDIA

*An All India Weekly*

**With an influential circulation in British Provinces and Indian States.**
**Full Of interesting articles on all topical affairs.**

*Subscription Rs. 5 per annum only*

**An excellent medium for high Class advertisements.**

*For contract Rates Apply to—*

**MANAGER**
**FEDERATED INDIA**
**Tondiarpet, Madras.**

---

## வில்ஸன் வாச்சு ஏஜண்டுகள்

அணியும் பட்டையும்
தபால் சார்ஜும் இனம்!

1 2 3 4

22-காரட் ரோல்டு கோல்டு கைக்கெடியாரம்; 5-வருஷம் உத்திரவாதம். சரியான காலத்தைக் காட்டும். பார்வைக்கு அழகாய் உறுதியான சாமான்களால் செய்யப்பட்டது. இக்கெடியாரங்களில் எம்மாதிரி ஷேப் ஆனபோதிலும் அனுப்பி வைக்கப்படும். விலை ரூ. 6—12—0

யூனியன் வாச்சு கம்பெனி,
21-வது பீட், ஜி. டி. மதராஸ்.

---

## இனம்
### வைத்தியவித்தியா

இளமையிலும் யௌவனத்திலும் முதுமையிலும் நோயற்ற வாழ்வை விரும்பும் ஸ்திரீ புருஷர்கள் மேற்கூறிய புத்தகத்தை வாசித்து அதிற் சொல்லிய விதிகளின்படி நடப்பது அவசியம்.

ராஜவைத்திய நாராயணஜி கேசவஜி,
48, சைனாபஜார், மதராஸ்.

---

## பெட்ரோமாக்ஸ் லைட்

பாண்டில், குளோப், அதன் உதிரி சாமான்கள் எல்லாம் ஸ்டாக்காய் கிடைக்கும்

பூச்சிவண்டர்
கியாஸ் லைட்

உறுதியானது. ரிபேர் ஏற்படாதது. இந்த மேக்கர் மதராசில் கிடைக்காது.

முழுவிபர லிஸ்டுக்கு, ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

Importers—
ஸன் கம்பெனி, தஞ்சாவூர்.

---

## கைத்தொழில்
## வணிக இரகசியம்

இதில் சோப்புகள், மெழுகுவத்தி, நெருப்புக்குச்சி, பெப்பர்மெண்ட், பிஸ்கத்து, கேக்குகள், வாசனை எண்ணெய்கள், அத்தர்கள், சாம்பிராணி வத்திகள், பன்னீர், சர்பத்துகள், இங்கி, பூட்பாலிஷ், வார்னிஷ், சாயங்கள், பலவித மருந்துகள், காகிதம், பென்சல் முதலியவைகள் செய்யும் முறைகளுடன் 200-பக்கங்கள் கொண்ட பெரிய புஸ்தகம். ரூ. 1-8-0.

மகாராஜா புஸ்தகசாலை,
...முதலி வீதி, மதராஸ்.

---

பலாசூர்
பண்டித
இராமநாத சாஸ்திரியள்,
ஸம்ஸ்கிருத பண்டிதர்,
அடையாறு லைப்ரரி,
மயிலாப்பூர், சென்னை.

என்னும் விலாசத்திற்கு 1 அணா ஸ்டாம்பு அனுப்பி நல்ல ஜாதக பலன்களையும் ஜபஹோமாதி சாந்திகளையும் தாயித்துகளையும் அடைந்து சுகப்படுங்கள்.

---

இனம்! இனம்!!

சார விவேகி, சதாநந்தன் சம்பாஷணை, "கிழவன் குமாரனுன்" இவ்விரண்டு கதை அடங்கிய புத்தகம் தங்கள் விலாசம் தெரிவித்தால் இனமாக அநுப்புவோம்.

சாது இரத்தினசற்குரு புத்தகசாலை,
பார்க் டவுன், சென்னை.

---

## பாரதியாரின் கீதங்கள்

| | | | |
|---|---|---|---|
| முதல் பாகம் | ரூ | 1 | 0 |
| இரண்டாம் பாகம் | ... | 1 | 0 |
| மூன்றும் பாகம் | ... | 0 | 10 |
| 4-ம் பாகம் (ஞானரதம்) | ... | 0 | 8 |
| பாஞ்சாலிசபதம் (காவியம்) | ... | 0 | 12 |
| பகவத்கீதை | ... | 1 | 0 |
| சந்திரிகையின் கதை | ... | 0 | 12 |

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

...shed by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudali St., Royapettah, Madras.

